

# வெற்றி தலைக்கேறி விட்டதா என்ன அவருக்கு?

**ஃபரூக் எஞ்சினீயர் புன்னகை புரிகிறார்**

"நான் எதையும் தலைக்கேற விடுவதில்லை. ஆம். புரதம் நிறைந்த ப்ரில்க்ரீமைத் தவிர வேறு எதையும் நான் தலைக்கேற விடுவதில்லை. ப்ரில்க்ரீம் என்னுடைய தலைமுடியை ஆரோக்கியமாக, நன்கு படிந்த நிலையில் வைத்திருக்கிறது. எப்படியிருக்க நான் விரும்புகிறேனோ அதுபோலவேதான்."

ப்ரில்க்ரீமில் இருக்கும் புரதம் மயிர்க்கால்களுக்கு வலுவூட்டி, தலைமுடிக்கு நல்ல ஊட்டம் அளிக்கிறது. ப்ரில்க்ரீமினால் கலையாத முடியுடன் மிடுக்காக நீங்கள் நாள் முழுவதும் விளங்கலாம். தவிர பிசுக்குத்தன்மையோ, ஒட்டிக்கொள்ளும் தன்மையோ அதற்குக் கிடையாது. அது முடியலங்காரத்திற்கோர் நவீன வழி.

ஃபரூக் மாதிரியே நீங்களும் புத்திசாலித்தனமானதைச் செய்யுங்கள். புரதம் நிறைந்த ப்ரில்க்ரீமை உபயோகியுங்கள்.




BrF-3191-TAM-2

புரதம் நிறைந்த
**ப்ரில்க்ரீம்**
அழகான முடிக்கு ஆரோக்கியமான வழி.

# கூடிக் குலவவும் சக்தியற்ற அசதியா உங்கள் மனைவிக்கு?

மணமான புதிதில் இருந்த இன்பம் எங்கே? குழந்தைகள் பிறக்கப் பிறக்க வேலைகள் மூண்டன. இன்றோ உங்கள் மனைவிக்கு வீடே கதி: சமைத்தல், துலக்கல்; தேய்த்தல்...ஓயாத அசதி. இதற்கு விடிவு?

நீங்கள் மனது வைத்தால் நடக்கும். க்ளியர்டோன் உதவியோடு. பிரஷர் குக்கர், இஸ்திரிப் பெட்டி, மிக்ஸர், மின்விசிறி... இதுபோல் பலப்பல க்ளியர்டோன் சாதனங்கள் உள்ளன. வாங்கிக் கொடுத்துப் பாருங்களேன், டாண் டாண் என்று வீட்டு வேலைகளை முடித்துவிடுவாள்; ஓய்வுநேரத்தோடு உங்களிடம் வருவாள்.

கிட்டத்திலுள்ள க்ளியர்டோன் வியாபாரியிடம் அவளை இட்டுச் சென்று காண்பியுங்கள்: வகைவகையான வீட்டுபயோக சாதனங்கள். பிடித்தமானவற்றை அவள் எடுத்துக் கொள்ளட்டும். அவள் வாழ்வே மாறிவிடும். உங்கள் வாழ்வும் தான்.



தி நேஷனல் ரேடியோ & எலக்ட்ரானிக்ஸ் கோ. லிட்.
பம்பாய் · கல்கத்தா · டெல்லி · சென்னை

Kleertone
க்ளியர்டோன்
—வீட்டுபயோக சாதனங்களின் படைப்பகம்

Creative Unit-975-*Tam.*

## மாதரின் அழகு மேலும் பரிமளிக்க...

லக்ஷ்மியின்

# பாலரீனா

## வாயில் புடவைகள்

அன்றாடம் உடுப்பதற்கும் எல்லா விசேஷ சந்தர்ப்பங்களுக்கும் உகந்த துணி. கவர்ச்சியான அணி இலேசானது சுருங்காதது. நேர்த்தி மிக்க டிசைன்கள். பாலரீனா-வாயில்கள் மேம்பட்டது.

இறக்குமதி செய்த 90s & 100s உயர்தர பருத்தியினால் செய்யப்பட்டவை. கண்கவர் வண்ணங்களில் உங்கள் மனதுக்குகந்த டிசைன்களில் கிடைக்கிறது.



தி
லக்ஷ்மி
மில்ஸ்
கம்பெனி லிமிடெட்
கோயம்புத்தூர்

உயர்ந்த துணிகளின்
உன்னத சின்னம்

K & CO. LMC 594 Tm.

# பினகா ஃப்ளோரைட்* பற்பசை வலிதரும் சொத்தையையும் பற்சிதைவையும் தடுக்கிறது

## ஆகவே நீங்கள் அதை உபயோகிக்க வேண்டும்

பல் வைத்தியர்களும் ஆராய்ச்சி விஞ்ஞானிகளும் இதை ஊர்ச்சிதம் செய்கின்றனர்

*"பற்சிதைவைக் காப்பதில் பெரும்பகுதி ஃப்ளோரைட் என்று நமக்கு இப்பொழுது தெரியும். பல் ஆரோக்கிய துறையில் விஞ்ஞான ஆராய்ச்சி தந்த ஒரு பெரும் சாதனை ஃப்ளோரைட்"—

"தி ஜெர்னல் ஆஃப் மெடிகல் ரிவ்யூ (தி மெடிஷன் & சர்ஜன் VIII 252-57 பிப். 1967)".

**பினகா ஃப்ளோரைடினால் பல்துலக்குங்கள் பற்களை உறுதியாக வைத்திருங்கள்**




பினகா டூத் பிரஷ்களிலுள்ள மழுக்கப்பட்ட முனைகள் ஈறுகளுக்கு ஊறு செய்யாது

CIBA

# வாழ்க்கை இன்பத்துக்கு எல்லையேது பஜாஜ் சாதனங்கள் இருக்கும்போது!

## குளிர் காலத்தில் வெதுவெதுப்பு!



உங்கள் வீட்டில் வெதுவெதுப்பான சுகமளிக்கும் சூழ்நிலையை உண்டாக்க விரும்பினால், பஜாஜ் சாதனங்கள் உங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்யும். உண்மையில், பஜாஜ் சாதனங்கள் அனைத்துமே சுகவாழ்வுக்காகத் தயாரிக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, ரூம் ஹீட்டர் இம்மர்ஷன் ஹீட்டர், போர்ட்டபிள் கீஸர், வாஷிங் மெஷின் முதலியவை.

தவிர பஜாஜ் கம்பெனிக்கு மட்டுமே நாடெங்கிலும் 3,500 விற்பனையாளர்களும், 16 கிளை அலுவலகங்களும் உள்ளன. இதன் மூலம் நாங்கள் விற்பனைக்கு முந்திய-பிந்திய சேவைகளைத் திறம்பட ஆற்றி வருகிறோம்.



**பஜாஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**

45—47, வீர் நரிமன் ரோடு, பம்பாய்—400 001

இந்தியாவெங்கிலும் கிளைகள் உள்ளன.




heros/BE-179 TAM

"அவர் சொன்னார், இந்தக் கொஞ்சும் அழகை மிஞ்ச முடியாது!"

"நான் சொன்னேன், அசோக்கை மிஞ்ச முடியாது!"

நான் அசோகா பிரிண்டுகளே அணிந்து எப்பொழுது புறப்பட்டாலும், அனைவரது கண்களும் என்மீதே பதிகின்றன; என்னையே பாராட்டுகின்றன. ஆகையால் நான் இப்போதெல்லாம் அசோகா மில் துணிகளையே அணிந்து வருகிறேன். அசோகாவின் பாலியெஸ்டர் கலந்த துணிகளுக்கும் இணையேது? அவை அணிவதற்கு சுகமானவை; கண்ணுக்கும் அழகானவை! நான் அவருக்காகவும் அசோகா மில்லின் அழகான கட்டம் போட்ட ஷர்ட்டிங் வாங்கித் தந்திருக்கிறேன். ஏனெனில், அவரைப் பாராட்ட எனக்கும் வாய்ப்புக் கிட்டுமே!



அசோக மில்ஸ்

ஏற்றமிகு 7 மில்களில் ஒன்று



லால்பாய் க்ரூப் துணிகள்

CMLB.21.203 TM

# ANNOUNCING!

The sale of

# BLENDED AND FANCY FABRICS

made by mixing cotton and

# GRASIM STAPLE FIBRE

from to-day at

## AKASH-DEEP, SANDHURST BRIDGE, CHOWPATTY

- Attractive Fancy Dress material for ladies
- Immaculate Bush Shirtings for gents
- Decorative Tapestry and Curtain materials
- Priced cheaper than cotton fabrics



**GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD., BIRLAGRAM, NAGDA (M.P.)**

## பொருளடக்கம்

பிரமாதீச, ஐப்பசி 5 — அக். 21, 1973



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



# கல்கி



மணமும், சுவையும் சொல்கிறதே!



இது **நரசுஸ் காபி** என்று!

நினைவிருக்கட்டும்!

"தெர்மலோ" முறையில் தயாரிக்கப்படும்

ஒரே காபி - **நரசுஸ் காபி!**



நரசுஸ் காபி கம்பெனி
சேலம்-7
கிளைகள்: பாண்டிச்சேரி, தமிழகமெங்கும்.

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 33 - இதழ் 12

# நிர்வாகச் சீர்கேடு

க. சந்தானம்

நோட்டு அச்சடித்துப் புழங்கவிடுவது; சர்க்கார் துறைத் தொழில்களை நஷ்டத்திலேயே இயக்குவது; எங்கும் வேலைநிறுத்தங்களை ஏற்படுத்திக்கொண்டிருப்பது; நேர்மை குன்றிய நிர்வாகம்— இவையனைத்தும் நாட்டில் இப்போது தோன்றியுள்ள பயங்கரமான பொருளாதார நெருக்கடி நிலைமைக்கு முக்கிய காரணங்கள் என்பது எல்லோருக்கும் தெரிந்ததே. ஆனால் மத்திய அரசிலும், மாநில அரசாங்கங்களிலும் நிர்வாகத்தில் ஏற்பட்டுள்ள க்ஷயரோகம் — செயலற்றுப் பட்டுப்போன நிலைமை — நெருக்கடிக்கான ஒவ்வொரு காரணத்தையும் மேலும் ஊக்குவிக்கிறது என்பது பலருக்கும் தெரிந்திருக்காது. தெரிந்திருந்தாலும் அதன் விளைவை முழுமையாகப் புரிந்து கொண்டிருக்க மாட்டார்கள்.

சில நாட்களாகவே அக்கௌண்டண்ட்—ஜெனரல் ஆபீஸ், மத்திய சுங்க இலாகா மற்றும் மத்திய அரசாங்கத்தைச் சேர்ந்த பல அலுவலகங்களில் வேலை சரிவர நடப்பதில்லை என்று எனக்கு நம்பகமான செய்திகள் வந்து கொண்டிருக்கின்றன. அங்கெல்லாம் கவனிக்கப்படாத வேலைகள் குவிந்து கொண்டிருக்கின்றன. மத்திய அரசாங்கக் காரியாலயங்களைப் பிடித்துக்கொண்டிருக்கும் இந்த நோய் மாநில அரசாங்கக் காரியால்யங்களுக்கும் தொத்து நோய் போலப் பரவிக் கொண்டு வருகிறது. அங்கெல்லாம் கூட வேலை சரிவர நடைபெறுவதில்லை. தமிழ்நாடு மின்வாரியத்திலிருந்து அக்டோபர் மாதத்தில் அனுப்பப்பட்டுள்ள மின்கட்டணத்துக்கான பில்கள் மே மாதத்துக்கானவை என்பது இந்த அலுவலகத்தில் வேலை எவ்வளவு சுறுசுறுப்பாக நடைபெறுகிறது என்பதற்கு ஓர் உதாரணம்.

மூன்றாவது பிரிவு, அதாவது கிளார்க்குகள் என்று சொல்லப்படும் ஊழியர்களிடையே வேலை செய்யக் கூடாது என்ற கட்டுப்பாடான பிடிவாதம் உருவாகியுள்ளதாகவே தோன்றுகிறது. நக்ஸலைட்டுகளின் ஆதிக்கத்துக்கு இந்தப் பிரிவினர் உள்ளாகி, அதன் விளைவாகவே இம்மாதிரி நிலைமை தோன்றியுள்ளதா அல்லது அதற்குப் புறம்பாக, சுயமாகவே ஏற்பட்டுள்ளதா என்பது நிச்சயமாகத் தெரியவில்லை. என்றாலும், இப்பிரிவு ஊழியர்களின் மனப்பான்மையில் எதிர்ப்பு உணர்ச்சி காணப்படுவது தெளிவாகத் தெரிகிறது. இவர்கள் தாமதமாகவே அலுவலகத்துக்கு வருகின்றனர். எவ்வளவு குறைவாக வேலை செய்ய முடியுமோ அவ்வளவே செய்கின்றனர். பகல் உணவுக்கு அரை மணியாவது முன்னதாகச் சென்று, அரை மணி பின்னரே வேலைக்குத் திரும்புகின்றனர். மாலைவரையில் இங்குமங்குமாகச் சோம்பித் திரிகின்றனர். அதிகாரிகளை ''கேரோ'' செய்வதும், யூனியன்கள் சார்பில் கோரிக்கைகளைச் சமர்ப்பிப்பதும் அடிக்கடி நிகழும் சம்பவங்களாகும். அவர்களிடம் கடமை உணர்ச்சி அடியோடு அற்றுப் போய் விட்டதாகவே சொல்ல வேண்டும். பெரும்பான்மையான ஊழியர்கள் வேலை செய்ய விருப்பமுள்ளவர்களாகவே இருக்கலாம். ஆனாலும் பொறுப்புணர்ச்சி இல்லாத சிறு கூட்டத்தாரின் மிரட்டலுக்குப் பயந்து இவர்களும் செயலற்றுப் போகின்றனர் என்று நம்ப வேண்டியிருக்கிறது. ஒழுங்கையும், கட்டுப்பாட்டையும் நிலைநாட்ட வேண்டிய பொறுப்புள்ள அதிகாரிகள் கூட, தங்கள் கடமையைச் செய்தால் மேலிடத்திலிருந்து தங்களுக்கு ஆதரவு கிடைக்குமோ கிடைக்காதோ என்ற கவலையால் கண்டிக்கத் தயங்குகின்றனர். ஊழியர்களுடன் நேருக்கு நேர் சச்சரவுகளை எவ்விதத்திலும் தவிர்க்க வேண்டும் என்று உயர் இடத்திலிருந்து அதிகாரிகளுக்குப் பொதுவாக உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டிருப்பதாகக்கூட எண்ணத் தோன்றுகிறது.

இம்மாதிரியான ஒழுங்கீனமும், பொறுப்பற்ற உணர்ச்சியும், நிர்வாகம் முழுவதிலும் பரவியுள்ளன.

பொதுநல சமுதாயத்தில் அரசாங்க ஊழியர்களெல்லாம் சமூக நலத்திலும்

நாட்டு நலத்திலும் அக்கறை கொண்டு லாப நோக்கின்றி சேவா உணர்ச்சியுடன் செயலாற்றக் கூடியவர்கள் என்று கருதப்படுகிறது. ஆனால் இப்போதுள்ள நிலையில் தனியார் துறையிலுள்ள வர்த்தகர்களும், தொழிலதிபர்களும் லாபம் சம்பாதிக்க வேண்டும் என்ற ஒரு லட்சியத்துக்காகவேனும் திறமையுடனும், மிகப் பொறுப்புடனும் வேலை செய்கிறார்களே யொழிய, பொதுத் துறையில் நடைபெற வேண்டிய வேலைகளில் நிர்வாகத்தினரோ, பொறியியல் இலாகாவினரோ, மருத்துவத் துறையினரோ, தொழிற் துறை ஊழியர்களோ எவருமே பொறுப்புணர்ச்சியோ கடமையுணர்ச்சியோ பெற்றிருக்கவில்லை. பரிதாபமான நிலை இது!

எவ்வகையிலும் திருப்தி அளிக்காத இத்தகைய நிலைமை நாட்டில் தோன்றியுள்ளதற்கு இரண்டு காரணங்கள் கூறலாம். ஒவ்வொரு காரியாலயத்திலும் நடைபெற வேண்டிய வேலைக்குத் தேவையான ஆட்களை விட அதிகமான ஊழியர்கள் இருக்கின்றனர். ஆட்கள் அதிகமாக அதிகமாக, அவர்கள் செய்யும் வேலை குறைகிறது என்பது அலுவலகங்களில் காணும் உண்மை. பார்கின்ஸன் போன்ற அறிஞர்கள் இந்த உண்மையை எடுத்துக் காட்டியுள்ளனர்.

அடுக்கு மாடிக் கட்டிடங்கள் எழுப்பி, பல இடங்களில் பரவலாக வேலை செய்யும் எல்லா அலுவலகங்களையும் ஒரே இடத்தில் அமைத்து இயங்கச் செய்யும் முயற்சி நல்ல நோக்கத்துடன், திறமையை உயர்த்தத்தான் மேற்கொள்ளப்படுகிறது என்றாலும் ஊழியர்களிடையே தொழிற்சாலைத் தொழிலாளிகளிடம் காணப்படும் யூனியன் மனப்பான்மையைத்தான் அதிகமாகத் தோற்றுவித்துள்ளது. தொழிற்சாலைகளில் தினசரி நடைபெறும் வேலையைக் கணக்கிடவும், அளக்கவும் அளவுகோல் முறைகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. வேலையை அடிப்படையாகக் கொண்டே தொழிற்சாலை இயங்குகிறது. ஆனால் சர்க்கார் காரியாலயங்களில் வேலையின் அளவையோ, முறையையோ கணக்கிட எந்த வழியுமில்லை. தொழிற்சாலை மனப்பான்மை மூலம் சர்க்கார் அலுவலகங்களில் கடமையும் பொறுப்பும் அற்றுப் போய் விட்டதையே பார்க்கிறோம்.

மூன்றாவது சம்பளக் கமிஷன் செய்துள்ள சிபாரிசுகள் மீது அரசாங்கம் தனது முடிவை அறிவித்துள்ளது. சர்க்கார் காரியாலயத்தில் ஊழியர்களுக்குக் குறைந்தபட்சம் மாதம் 196 ரூபாய் சம்பளம் கொடுக்கப்பட வேண்டும் என்று நிர்ணயித்திருக்கிறது. விலைவாசி உயர்வை யொட்டி மற்ற பல ரக அரசாங்க ஊழியர்களுக்கு ஊதிய உயர்வு கிடைக்கவிருக்கிறது. ஆண்டொன்றுக்குச் சுமார் 300 கோடி ரூபாய் இதனால் அதிகச் செலவு ஆகும். அதிகச் செலவு ஒருபுறம் இருக்கட்டும். சலுகைகளைப் பெறும் அரசாங்க ஊழியர்கள் அவர்களுடைய கடமைகளை ஆற்றவும், வேலைகளைச் சரிவரச் செய்யவும் இனியாவது முன்வருவார்களா என்பதுதான் முக்கியம். அதிகப்படியாக இப்போது அறிவிக்கப்பட்டுள்ள சம்பளம், பஞ்சப்படி, பென்ஷன்கள், மற்றச் சலுகைகள் எல்லாம் அவரவர்கள் செய்யும் வேலையைப் பொறுத்தே இருக்கும் என்று ஒரு நியதியை உருவாக்க மத்திய அரசாங்கம் தைரியத்துடன் முன் வருமா? சலுகைகளையும் பெற்றுக் கொண்டு, மேலும் சச்சரவைத் தூண்டி விடும் ஊழியர்கள் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும் என்று மத்திய அரசு இனியாவது கண்டிப்புக் காட்டுமா? ஒழுங்கை நிலைநாட்ட அதிகாரிகளுக்கு மேலிடத்து ஆதரவு அவசியம். இதை அரசு அவர்களுக்குத் தருமா?

கடமை உணர்ச்சியை வளர்ப்பதில் அதிகாரிகளுக்கு மட்டும்தான் பொறுப்பு உண்டு என்பதில்லை. மூன்றாவது பிரிவு ஊழியர்களில் பெரும்பான்மையினர் பட்டதாரிகள். அறிவும் ஆற்றலும் படைத்தவர்கள். அவர்கள் தங்கள் வேலையைக் கடமையுணர்வுடன் செய்யாமல் போனால் கஷ்டப்படுபவர்கள் மத்திய அரசாங்கமோ, அமைச்சர்களோ, சட்டசபை அங்கத்தினர்களோ அல்ல; மாறாக அல்லல்படுவது சாதாரண மக்களே. இதை அவர்கள் நன்றாக உணர வேண்டும். அவர்களுக்குக் குறைகள் இருக்குமேயானால் அவற்றைத் தாராளமாக எடுத்துச் சொல்லி நியாயமான முறைகளில் பரிகாரம் தேடிக் கொள்ளட்டும். ஆனால் தங்களுடைய கடமையைச் செய்வதில் தவறக் கூடாது. வேலை செய்யாமல் இருத்தல், குறைந்த வேலை செய்தல், தாமதமாகச் செய்தல் முதலிய செய்கைகளினால், தங்களுடைய மனச்சாட்சிக்கே தவறு இழைக்கிறார்கள் என்பதை உணராவிட்டாலும் அவர்கள் பிறந்த நாட்டுக்கும், நாட்டு மக்களுக்கும் தீங்கு இழைக்கின்றனர் என்பதையாவது உணர வேண்டும். கடமை உணர்ச்சியும்; சத்திய உள்ளமும் உள்ள ஊழியர்கள் மற்றவர்களின் அச்சுறுத்தல்களுக்கு அடிபணியாமல், நிலைமையைச் சீர்திருத்த உறுதி கொள்ள வேண்டியது அவசியம்.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## சர்க்கரையும் சாராயமும்

தீபாவளி மாதமாகிய இந்த அக்டோபர் மாதத்தில் பண்டிகை உபயோகத்துக்காகக் கூடுதல் சர்க்கரை வேண்டி மதுரை மாவட்ட மக்கள் தவிக்கும்போது அவர்களுக்கு அது கிடைக்கவில்லை. மாவட்டத்துக்கு எப்போதும் அளிக்கப்படும் வழக்கமான 'சர்க்கரைக் கோட்டா'தான் இந்த மாதமும் தரப்பட்டிருப்பதால் சர்க்கரைக் கார்டு வைத்திருப்பவர்களுக்குத் தீபாவளிக்காகக் கூடுதல் சர்க்கரை எதுவும் தரப்பட மாட்டாது என்று மாவட்டத் தலைமை அதிகாரி அதிகாரபூர்வமாக அறிவித்து விட்டார். ஆனால் மக்கள் கேட்காமலே கூடுதலான கோட்டா சப்ளை ஆகியிருக்கிறது ஒரு பண்டம். அதுதான் சாராயம். பண்டிகை உபயோகத்துக்காகத் தான் இந்தக் கூடுதல் சப்ளையாம்! சில விஷயங்களைப் பகிரங்கமாக அறிவிப்பதில் வெட்கம்கூட இல்லாத அளவுக்கு விவஸ்தை சீரழிந்திருக்கிறது. பார்த்தீர்களா?

## அறப்போரில் களப்பலி

தமிழ்நாடு ஸ்தாபன காங்கிரஸ் நடத்திய ஒரு வாரகால அறப் போராட்ட மறியலிலே ஒரு களப் பலியும் நேர்ந்து விட்டது. போராட்டத்தில் கலந்துகொண்ட இளைஞர்களில் ஒருவர் திருச்சி சிறையில் மரணமடைந்து விட்டார். முதல் நாளான 3-10-73 மறியலில் கலந்து கொண்ட மன்னார்குடியைச் சேர்ந்த 24 வயது ராஜாங்கம் என்ற இளைஞர் பட்டுக்கோட்டையில் கைது செய்யப்பட்டுத் திருச்சி மத்திய சிறைக்குக் கொண்டு வரப்பட்டிருந்தார். 7-10-73 காலையில் இவர் சிறையில் இறந்தபோது காங்கிரஸ் தொண்டர்கள் மனமுருகிக் கண்ணீர் சிந்தினர். தம்முடைய குடும்பத்தினருக்கு ஒரே மகனான இவருக்குத் திருமணமாகி ஓராண்டுதான் ஆகிறது. ஸ்தாபன காங்கிரஸ் தனியாக நடத்திய இந்த அறப் போரில் ஒரு வார காலத்திலுமாகச் சேர்த்து மொத்தம் நாற்பதினாயிரம் பேருக்கு மேல் கலந்துகொண்டிருக்கிறார்கள். முப்பதாயிரம் பேர்களுக்கு மேல் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள். சில இடங்களில் கைதானவர்களுக்கு உணவு வசதி செய்து தர முடியாமல் அரசாங்கம் அவர்களைப் பட்டினி போட்டிருக்கிறது.

## அர்த்தமற்ற வாதம்

அக்டோபர் மாத முதல் வாரம் கும்பகோணத்தில் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசும்போது, ''மற்ற மாநிலங்களை நோக்கும்போது தமிழ்நாடு சொர்க்கமாகத் திகழ்கிறது. திரு காமராஜ் அவர்கள் பெங்களூர் சென்றிருந்தபோது இதைப் புரிந்து கொண்டிருக்க வேண்டும். அதை அவர் உணர்ந்திருப்பாரானால் படி அரிசி ஏழு ரூபாய் வரை விற்கும் மைசூர் மாநிலத்தில் போய் அவர் தமது போராட்டத்தைத் தொடங்கியிருக்க வேண்டும்'' என்றெல்லாம் வருத்தப்பட்டிருக்கிறார் தமிழக முதல்வர். முதல்வரின் வாதம் அர்த்தமற்றது. திரு காமராஜ் எந்தக் கட்சியின் சார்புடையவரோ அந்தக் கட்சியின் மைசூர்க் கிளை அங்கேயும் விலைவாசியை எதிர்த்துப் போராடி வருகிறது. தமிழ் நாட்டிலுள்ள ஸ்தாபன காங்கிரஸினர் தமிழக நிலைமைகளை வைத்து இங்கே போராடுகின்றனர். இங்குள்ள நிலைமைகளை விட வேறு மாநிலங்களில் நிலைமை படுமோசமாக இருக்கிறது என்பதே இங்கே இருப்பவர்களுக்கு ஆறுதலாகிவிட முடியாது.

## பதுக்கல் ஒழிப்பு

''பதுக்கல் பறிமுதல் இயக்கம்'' என்ற பெயரில் வலது கம்யூனிஸ்ட்டுகள் நடத்திய போராட்டத்தின் மூலம் பதுக்கியிருப்பதாக அவர்கள் கொடுத்த பல தகவல்கள் தவறானவை என்று தமிழ்நாடு முதல்வர் திரு கருணாநிதி கூறியிருக்கிறார். ''பதுக்கலைக் கண்டுபிடித்து வெளிக் கொணர உதவி செய்கிறோம் என்கிற பெயரில் ஒரு பெரிய கூட்டத்தைச் சேர்த்துக் கொண்டு வர்த்தக நிலையங்களுக்கோ, சேமிப்புக் கிடங்குகளுக்கோ கட்சி ஆட்கள் படையெடுத்துப் போகக் கூடாது! சம்பந்தப்பட்ட வர்த்தக நிலையம், கிடங்கு பற்றி ஆதாரபூர்வமான தகவல் இருந்தால் அதை இருவர் அல்லது மூவர் கூடிச் சென்று போலீஸ் நிலைய அதிகாரிகளிடம் தெரிவிக்க வேண்டுமே தவிரத் தாங்களே அதிகாரத்தைக் கையில் எடுத்துக்கொள்ளக்கூடாது. திருச்சி மாவட்டம் தாந்தோணி என்ற கிராமத்தில் ஒருவர் வீடு கட்டுவதற்குப் பெர்மிட் எடுத்து வாங்கி ஸ்டாக் செய்திருந்த சிமெண்ட்டைப் 'பதுக்கல்' என்று பொய்யாக எடுத்துச் சொல்லிக் கூட்டம் கூட்டிய பின் போலீஸார் சென்று 'ஸீல்' வைத்து விட்டார்கள். உரிய பெர்மிட் காட்டப்பட்ட பின் அதிகாரிகள் ஏன் ஸீல் வைத்தார்கள் என விசாரிக்கச் சொல்லியிருக்கிறேன்'' என்று விளக்கியுள்ளார் தமிழக முதல்வர். பதுக்கலை வெளிக் கொணரும் போராட்டம் என்ற பெயரில் சமூக விரோதிகள் விஜயவாடாவில் ஆபர் பஜாரைச் சூறையாடியது போல் எதுவும் நடந்து விடக் கூடாது என்ற எச்சரிக்கை முதல்வருக்கு இருப்பது நியாயமானதே.

## அச்சுதபட்டவர்த்தன் எச்சரிக்கை

சென்னையில் நடைபெற்ற காந்தியடிகள் விழாவில் பேசிய திரு அச்சுதபட்டவர்த்தன், ''சீன, ரஷ்ய நாகரிகங்களில் மோகம் கொள்வதும் ஒரு ஃபேஷனாகி வருகிறது. இந்தப் பிரசாரம் சிவப்புப் பணம் மூலமாக இந்நாட்டில் செய்யப்பட்டு வருகிறது. தேர்தல் காலங்களில் மட்டுமின்றிச் சில கிளர்ச்சிகளைத் தூண்டி விடுவதற்கும் வேலைநிறுத்தங்களை ஊக்குவிப்பதற்கும் சிவப்புப் பணம் உள்ளே வந்து பயன்படுகிறது'' என்று விளக்கி மக்களை வெளிநாட்டு அபாயங்களிலிருந்து விலகி நிற்குமாறு எச்சரித்திருக்கிறார்.

அட்டைப்பட விளக்கம்

# திருவலம் மௌன சுவாமிகள்

சென்னை - பெங்களூர் சாலையில் ஆர்க்காட்டிலிருந்து பத்தாவது மைலில் பொன்னி ஆற்றங்கரையில் ஒரு சிற்றூர் - ஆனால் அழகான ஊர். பெயர் திருவலம். இதற்குப் புகழ் பெற்றளித்தவர் ஒரு துறவி. எளிமை என்றால் எப்பேர்ப்பட்ட எளிமை!

ஒரு கிழிந்த சணல் சாக்குத் துணியில் ஒரு கோவணம். அந்தக் கோவணத்தை இடுப்போடு தாங்கிக் கொண்டிருப்பதும் ஒரு சாக்குத் துணியில் கிழித்த 'அரைஞாண்'தான்.

அவர் தங்கிக் கொண்டிருப்பதோ ரொம்பச் சாதாரணமான ஒரு குடிசை. உள்ளே எந்த உடைமையும் கிடையாது. சில சட்டிகளே இருக்கின்றன.

அரிசியையோ, கேழ்வரகையோ, காய்கறிகளுடன் ஒன்றாகப் போட்டுக் கொதிக்க வைத்துக் கூழ் காய்ச்சுவதற்குத்தான் அவையும் இருக்கின்றன. அந்தச் சட்டிகளும் ஒரே வேளைதான் அந்தத் துறவிக்குப் பயன்படுகின்றன.

ஆமாம்! அந்தக் கூழையும் தாமே தயாரித்து ஒரு வேளைதான் உட்கொள்ளுகிறார். அதன் பின் நாள் முழுவதும் ஜலபானம் கூடச் செய்வது கிடையாது.

திருவலம் மௌன ஸ்வாமிகள்தான் அந்த மெய்ஞ்ஞானத் துறவி.

அவரிடம் மக்களுக்கு அளவில்லாத நம்பிக்கை. அந்த மகான் பார்வை பட்டாலோ, அவர் கையிலிருந்து எதையாவது பெற்றாலோ தங்கள் குறைகளெல்லாம் நீங்கிவிடும் என்று அவர்கள் நம்புகிறார்கள். திருவலம் சுவாமிகள் அந்த நம்பிக்கையைப் பொய்ப்பித்ததில்லை. அவர்களுக்குக் கண்கண்ட தெய்வமாக விளங்குகிறார்.

அமாவாசையன்று அக்கம் பக்கத்திலிருந்தும் நெடுந்தூரத்துக்கு அப்பாலிருந்தும் நூற்றுக் கணக்கில் மக்கள் சுவாமிகளைத் தேடி வருகிறார்கள். அப்படி வருகிறவர்களுக்கெல்லாம் அவர் வில்வமும் விபூதியும் அளிப்பதில்லை. சைவத்தைக் கடைப்பிடிப்பவர்களுக்கு மட்டும்தான் விபூதியும் வில்வமும் அளித்து வருகிறார்.

அவர்கள் விரும்பி நாலணாவும் எட்டணாவும் ஒரு ரூபாயும் காணிக்கை செலுத்துகிறார்கள். அந்தக் காணிக்கையே பல லட்சம் ரூபாய்க்கு வருகிறது! அதைக் கொண்டு திருவலம் கோயிலைப் புனர் நிர்மாணம் செய்து கும்பாபிஷேகம் செய்திருக்கிறார்.

சென்னை கந்தகோட்டம், பொன்னாச்சி மாரியம்மன், திருப்பதி வெங்கடேசுவரப்பெருமாள், திருத்தணி முருகன் கோயில்களுக்கு வெள்ளி ரதமும், திருப்பதி கோவிந்தராஜப் பெருமாளுக்கு மரத் தேரும் செய்து அளித்த மகான், இவர்தான். எல்லாம் மக்களின் நன்கொடைகள்தான். ரூபாய் எழுபத்தையாயிரம் வரையில் பாங்கியில் டெபாஸிட் செய்து அதிலிருந்து வரும் வட்டியைக் கொண்டு திருவலம் கோயிலில் ஆறுகால பூஜைகள் தவறாமல் நடைபெற ஏற்பாடு செய்திருக்கிறார்.

திருவலம் கிராமத்திலும் அந்த ஊரைச் சுற்றி வசிப்பவர்களிடமும் உள்ள தீய பழக்கங்களைச் சுவாமிகள் பெரு முயற்சி செய்து அறிவுரைகள் வழங்கி, விரட்டி விட்டார். இப்போது அந்தக் கிராமத்து மக்கள் மது அருந்துவதில்லை. மாமிசம் சாப்பிடுவதில்லை. மாமிசம் விற்கிற கடை எதுவும் அங்கில்லை.

இதுமட்டுமா? மைசூர் மாநிலத்திலிருந்து வந்து குடியேறியிருக்கும் பன்னிரண்டாயிரம் லாமாக்களையும் மாமிசம் சாப்பிடுவதிலிருந்து விடுவித்து அவர்களைச் சைவர்களாக்கியிருக்கிறார். இது சாதாரண விஷயமா? மகா புருஷர் நிகழ்த்தும் 'புரட்சி' என்று வர்ணிக்கலாமில்லையா?

இப்போது திருவலத்தில் கோயில் கொண்டிருக்கும் தனுமாத்தியம்மனுக்கு வைரமுடி செய்து வருகிறார்கள். அந்த வைர முடி சூட்டு விழா இம்மாதம் இருபத்தைந்தாம் தேதி தீபாவளி தினத்தன்று நடைபெறுகிறது.

நாட்டிலே தெய்வ பக்தி ஓங்க வேண்டும் என்றும், சைவம் தழைத்தோங்க வேண்டும் என்றும் உறுதியுடன் தொண்டாற்றி வருகிறார் ஸ்ரீலஸ்ரீ சிவானந்த மௌன சுவாமிகள். அவர் பணி சிறக்கட்டும்!

— "பரிரதன்"

---

**ராஜாஜி சிந்தனை**

அளவுக்கதிகமான விஷயங்களை இளைஞர்களுடைய மூளையில் திணிக்க முயலுவது நல்லது அல்ல. மாறாக இளைஞர்களாக இருக்கும்போதுதான் அவர்களுடைய மூளையில் நேர் வழியில் சிந்திக்கும் சக்தியை வளர்த்து முறையாகச் செய்யும் பழக்கத்தை ஏற்படுத்த முடியும். உதாரணத்துக்கு ஒன்றைச் சொல்கிறேன். வாழ்க்கையையும் அதனுடைய பிரச்னைகளையும் பார்த்து அதிகமாக அனுபவித்திராத சிறுவர் சிறுமியரால் சரித்திரத்தைப் புரிந்து கொள்ள முடியாது. மூளை ஒரு யந்திரம் போன்றது. இளைஞராக இருக்கும்போதே அதனைச் சரியான முறையில் பொருத்தி ஒழுங்காக வைக்க வேண்டும். ஒருமுறை இதைச் செய்துவிட்டால் பின்னால் அது தன்னைத் தானே கவனித்துக் கொள்ளும். எல்லாத் துறைகளிலும் அறிவு பெறுவதற்குப் பின்னால் அவர்களுக்கு நிறைய நேரம் இருக்கிறது. எனவே இளைஞர்களுக்குப் பயிற்சியளிக்கும்போது ஒன்றைச் சரியான கண்ணோட்டத்துடன் பார்க்கும் பழக்கத்தை ஏற்படுத்துவது, விஞ்ஞான விஷயங்களை அறிவதில் ஆர்வமூட்டுவது, நேர்வழியில் சிந்திக்கக் கற்பிப்பது போன்ற விஷயங்களிலேயே கவனம் செலுத்த வேண்டும். ஏகப்பட்ட விஷயங்களை மூளையில் போட்டுத் திணிக்க முயலக் கூடாது.

# நீங்கள் செய்வது எதுவானாலும் சரி, பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் அதை சிறந்த முறையில் செய்ய உதவுகிறது.



பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் ஒரு 100 வாட் பல்பினைப் போல் இருபங்கு ஒளி தருகிறது. இருப்பினும் இதற்கு ஒரு 40 வாட் பல்புக்கான அளவு மின்சாரமே தேவைப்படுகிறது. பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் பொருத்தி மின்சாரத்தை மிச்சப்படுத்துங்கள்.
தரம் மற்றும் உழைப்பு இவ்விஷயத்தில் பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட்டே வாங்குவதற்குச் சிறந்ததாகும்.
கச்சிதமான பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் யூனிட் தரமான உறுப்புகளுடன் முன்கூட்டியே ஒயர் செய்யப்பட்டதாகும். பொருத்துவதற்கு எளிதானது. உபயோகிப்பதற்கு சிக்கனமானது. வேலைகளை சிறந்த முறையில் செய்ய இது உதவுகிறது—உங்கள் கடையிலும் சரி, வீட்டிலும் சரி.

**அரைப்பங்கு சிலவில் இருபங்கு ஒளி!**

சிறந்த ஒரு லாம்ப் வேண்டுமா?
அதை முதலில் அளிப்பது பிலிப்ஸ்

# பிலிப்ஸ்




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

எழிலரசி-
ராய்ப்பூர்
இளவரசி
யாரோ?

'மிஸ் ஏஷியா 1973'

'மிஸ் ஏஷியா 1973'



ராய்ப்பூர் மில்ஸ்
ஏற்றமிகு 7 மில்களில் ஒன்று



லால்பாய் க்ருப்
துணிகள்

CMLB.30.162 R TM

விற்பனை ஏஜெண்டுகள்: M/S. ஏ. ஜே. எஸ். படேல் அண்ட் கம்பெனி, 5, கிடங்குத் தெரு, சென்னை-1; 76, கிழக்கு மாராட் தெரு, மதுரை. அதிகாரம் பெற்ற சில்லறை விற்பனையாளர்கள்: M/S. வெங்கடேஷ் 234, 244, என். எஸ். ஸி. போஸ் ரோடு, சென்னை-1. M/S. ஜஸ்வரீஸ், 26-பி, மேல கோபுரத் தெரு, மதுரை. M/S. ஆனந்த் டெக்ஸ்டைல்ஸ், பெரிய கடை வீதி, திருச்சி-8.




ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்



சிவபெருமான், திருமால் இரண்டு பேரையும் உபாசிப்பதற்கு நீண்ட காலமாக ஒரு விதி இருக்கிறது. லோக வியாபாரங்கள் அழகாக, தர்மமாக நடப்பதற்கு ஜகத்பரிபாலகரான மகாவிஷ்ணுவையும், இந்த வியாபாரங்களிலிருந்து மனசைத் திருப்பி ஆதார வஸ்துவில் ஒடுங்குவதற்கு சம்ஹாரமூர்த்தியான பரமேச்வரனையும் வழிபடச் சொல்லியிருக்கிறார்கள்.

இதற்கேற்ப, வெளியிலே பார்த்தாலும் மகாவிஷ்ணு தாமே திருபுவன சக்ரவர்த்தியாக இருக்கிறார்? பரமேசுவரனே ஆண்டியாக, பிட்சாண்டியாக அல்லவா இருக்கிறார்? இருவரிடமும் இருக்கிற சொத்துக்களைக் கொஞ்சம் கணக்கெடுத்துப் பார்ப்போம். சிவனிடம் சாம்பல், எருக்கம்பூ, தும்பைப்பூ, ஊமத்தை, மண்டை ஓடு, யானைத் தோல், பாம்பு இவைதான் இருக்கின்றன. இதற்கெல்லாம் யாரும் விலை கொடுக்கமாட்டார்கள். விலை போகாத வஸ்துக்கள்தான் சிவனிடம் உள்ளன. மகாவிஷ்ணுவிடமோ கிரீட குண்டலங்கள், முக்தா ஹாரங்கள், பீதாம்பரம், கௌஸ்துப மணி எல்லாம் இருக்கின்றன. இவற்றுக்கு எவரும் விலை நிர்ணயிக்க முடியாது. சிவனிடம் உள்ளதற்கு விலை மதிப்பு இல்லை (valueless); விஷ்ணுவிடம் உள்ளதோ விலை மதிக்கவே முடியாதது. (invaluable). எல்லாவற்றுக்கும் மேலாக மகாவிஷ்ணுவிடம் ஐசுவரிய தேவதையான மகாலக்ஷ்மியே இருக்கிறாள். பரமசிவனிடம் இருக்கும் அம்பாளுக்கோ 'அபர்ணா' என்று பெயர். ஓர் இலை (பர்ணம்)கூட இல்லாதவள் என்று அர்த்தம். இலையைக்கூட உண்ணாமல் பரம தியாகியாகத் தபஸ் செய்தவள் அபர்ணா.

இதிலிருந்து லோகமெல்லாம் தர்மத்தோடு சந்தோஷமாக இருப்பதற்கு மகாவிஷ்ணுவையும், வைராக்கியம் வருவதற்குப் பரமேசுவரனையும் ஆராதிப்பதில் பொருத்தம் இருப்பது தெரியும். மகாவிஷ்ணுவால் ஞானம் தர முடியாது என்றோ, பரமேசுவரனால் லோக வியாபாரம் நன்றாக நடக்க அநுக்கிரகிக்க இயலாது என்றோ அர்த்தமில்லை. இரண்டு மூர்த்திகளை வழிபடுகிறபோது இப்படி இரண்டு விதங்களில் ஆராதிப்பது ஒவ்வொரு விதத்தில் ஒவ்வொருவரிடம் சித்த ஒருமைப்பாடு (ஐகாக்ரியம்) கொள்வதற்கு உதவும்.

இந்த அடிப்படையில்தான் விடியற்காலையில் ஒவ்வொருவரும் எழுந்தவுடன் 'ஹரி நாராயண, ஹரி நாராயண' என்று கொஞ்ச காலமேனும் ஸ்மரணம் செய்ய வேண்டும் என்றும், சாயங்காலத்தில் 'சிவ சிவ' என்று சிறிதுபொழுதேனும் ஸ்மரிக்க வேண்டும் என்றும் பெரியவர்கள் விதித்திருக்கிறார்கள். வெகு சுலபமான சாதனம். எல்லோரும் இதை அவசியம் செய்ய வேண்டும்.

காலையில் லோகம் முழுக்கத் தூக்கத்திலிருந்து விடுபட்டு மலர்ச்சி அடைகிறது; சூரியன் பல பல என உதிக்கிறான்; உலக காரியங்கள் எல்லாம் தொடங்குகின்றன. எனவே குளிர்ந்த வைகறைப் போதில் நீருண்ட மேகம்போல் குளிர்ந்த ஜகத் பரிபாலனான விஷ்ணுவின் நாமங்களை உச்சரிக்க வேண்டும். மாலையில் அவரவரும் வேலை முடிந்து வீடு திரும்புகிறார்கள்; பட்சிகள் கூடக் கூட்டுக்குத் திரும்பி விடுகின்றன; சூரியனும் மலை வாயில் இறங்குகிறான். இப்படி லோக வியாபாரங்கள் ஒடுங்கத் தொடங்குகிற அந்திப் போதில் நம் ஆட்டங்களை யெல்லாம் ஒடுக்கி அமைதி தருகிற ஞானமூர்த்தியான பரமேசுவரனின் நாமாவை உச்சரிக்க வேண்டும்.

அண்டம் பிண்டம் இரண்டும் அடிப்படையில் ஒரே சரக்கானதால் வெளிஉலக நடப்புக்கும் நம் அக உணர்வுகளுக்கும் சம்பந்தம் உண்டு. உலகில் அருணோதயத்துக்குமுன்பு பட்சி ஜாலங்கள் விழித்துக் கொண்டு கூவத் தொடங்குகிற வேளையில், 'லோகமெல்லாம் நன்றாக இருக்க வேண்டும்' என்ற எண்ணத்தை மனசில் நன்றாகப் பதிய வைத்துக் கொண்டு சாட்சாத் ஸ்ரீமந் நாராயணனைத் தியானிப்பது எளிதில் முடியும். இதே போல் வெளியுலகம் ஒடுங்கித் தன்மயமாகி, இருள் கவிந்து வருகிற அந்தி வேளையில் இந்திரியங்களை ஒடுக்கிச் சாந்தமாக சிவபெருமானின் தியானத்தில் அமிழ்வது சகஜமாகவும், சுலபமாகவும் இருக்கிறது.

நம்முடைய மனோபாவத்தைப் பொறுத்து இப்படி இரண்டுவிதத்தில் உபாசித்தாலும் இரண்டு மூர்த்திகளும் ஒன்றேதான் என்ற நினைப்பு போகக் கூடாது. காலையில் பஞ்சகச்சம் கட்டிக் கொண்டு சந்தியாவந்தனம் செய்த அதே மனிதர் பகலில் ஸூட் போட்டுக் கொண்டு ஆபீஸுக்குப் போகிறார். வெவ்வேறு காரியங்களுக்காக, வெவ்வேறு வேஷங்களைப் போட்டுக் கொண்டாலும் ஆசாமி ஒருத்தர்தான். ஸ்வாமியும் ஒருத்தர்தான்.

# ரோஜாப் பைத்தியம்

கோமகள்

பூக்களின் நறுமணம் சூழ்ந்த மாலை நேரம். நர்ஸரி முழுதும் ஈரவாடை. பூமியில் புதையுண்ட நீர்க் குழாயின் ஊற்றுக் கண்கள் செடிகளைக் குளிர்வித்துக் கொண்டிருந்தன. அலங்கார மரப் படிகளில் அழகுற அடுக்கி வைக்கப்பட்டுப் பூத்திருந்த ரோஜாப் பூக்களின் அசைவுகளைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான் ஸ்ரீதரன். சிவப்பு, வெள்ளை, ஆரஞ்சு, ரோஸ், வாடா மல்லிகை நிறம் என்று எத்தனை எத்தனை வண்ணங்கள். அந்த ரோஜா வகைகளில்!

பணியாட்கள் குறுக்கும் நெடுக்கும் போவதும், பூவாளியால் இளங் கன்றுகளுக்கு நீர் வார்ப்பதும், விற்பனைக்குச் செடிகள் எடுத்துத் தருவதுமாக இருந்தனர்.

தெருப் பக்க இரும்புக் கிராதியருகே பூத்திருந்த பல வண்ண போகன்வில்லா பூக்கள் கூட்டத்திடையே திடீரென்று சில அழகுத் தேவதைகள் படையெடுத்து வந்தனர். பூக்களுக்கு எத்தனை நிறமுண்டோ அத்தனை வண்ணங்களில் அவர்கள் உடைகள்! மலர்களுக்கு எத்தனை முகங்களுண்டோ, அத்தனை மதிமுகங்கள்! தென்றலில் அசையும் மலர்க் கொடிகளைப் போன்ற அவர்கள் ஒயில் நடை!

அவர்கள் ஸ்ரீதர் அமர்ந்திருந்த பக்கவாட்டு வராந்தாவின் வழியாகக் கோபால் இருக்குமிடத்துக்குச் சென்றனர். கோபால் ஸ்ரீதரின் அண்ணன். நர்ஸரி நிர்வாகத்தில் ஆரம்பம் முதலே பங்கெடுத்துக் கொண்டு வருபவன். அப்பா சிவானந்தம் ஒன்றுமே இல்லாமல் ஆரம்பித்த சிவா நர்ஸரி இன்று ஆல்போல் தழைத்து நிற்க அப்பா மட்டுமல்ல, அண்ணு கோபாலின் உழைப்பும்தான் காரணம்.

நாளடைவில் சிவா நர்ஸரி செடிகளுக்கு ஒரு தனி மௌசு ஏற்பட்டதுடன், அங்கே வாங்கினால்தான் கௌரவம் என்ற நிலையும் ஏற்பட்டது. பல பெரிய மனிதர்கள் வீட்டுத் தோட்டப் பராமரிப்பு சிவா நர்ஸரிக்குக் கிடைத்தது. அரசினர் மாளிகைகளும், சாலைப் பூங்காக்களும் சிவா நர்ஸரி உதவியால் பேரழகில் பொலிந்தன.



அப்பா ஓய்வுக் கால அமைதியில் ஈடுபட்டு இறைவழிபாடுகளிலேயே காலம் கழித்து வந்தார். அண்ணா கோபால் மட்டும் மிகப் பெரிய நர்ஸரிப் பொறுப்பை ஏற்று வெற்றிகரமாக நிறைவேற்ற முடியாது என்பதால் ஸ்ரீதரனும் இதே தொழிலில் காலை வைத்தான். தந்தையின் தொழிலில் தானும் ஈடுபடுகிறோம் என்று சாதாரணமாக வந்த ஸ்ரீதரனைத் தோட்டக் கலை ஆர்வம் பலமாகப் பற்றிக் கொண்டது. குறிப்பாக ரோஜாக்கள் அவனை மிகவும் கவர்ந்தன. ரோஜாக்களைப் பற்றிய பல புத்தகங்களை மேல்நாடுகளில் இருந்துகூடத் தருவித்துப் படித்தான். இந்தியாவில் அறிமுகம் இல்லாத பல ரோஜா வகைகளை அதிகப் பணச் செலவில் வரவழைத்து உஷ்ண நாடுகளில் அவைகளைப் பராமரிக்க முடியுமா என்று ஆராய்ந்தான். முழு வெற்றி அவனுக்கு ஏற்படவில்லை என்றாலும், ஓரிரு சிறப்பு வகைகளை இந்த நாட்டுக்கு அறிமுகம் செய்து வைத்து, பம்பாயிலும் மார்க்கெட் பிடித்தான்.

கிணுகிணுக்கும் சிரிப்பொலிகள் அவன் சிந்தனையைக் கலைத்தன.

கோபாலிடம் ஒட்டி உறவாடுவதுபோல் ஒரு குரல் கெஞ்சியது. ''அத்தான்! இவர்களுக்குப் பூச்செடிகள் வாங்கணுமாம். அதுவும் 'கன்ஸிடரேஷன் ரேட்'டில்! எல்லாம் என் தோழிகள். வழக்கமாகப் போடற பில்லை விடக் கூட விலை போடுங்க, தாங்குகிற புள்ளிகள்தான்!''

ஸ்ரீதர் செவிமடுத்து நிதானித்தான். பேசுவது அன்னியின் குரல் போலவே இருக்கிறதே.... அண்ணாவையும் அத்தான் என்கிறாளே..... ஒருவேளை அவள் அன்னியின் தங்கை சரோஜாதானோ? அவள் இங்கு ஹாஸ்டலில் இருந்துகொண்டு கல்லூரியில் படித்து வருகிறாளா? அந்தக் கூட்டத்தை மெல்ல நோட்டமிட்டான் அவன்.

ஒருத்தி புடவை, ஒருத்தி பெல்பாட்டம், ஒருத்தி மாக்ஸி, ஒருத்தி லுங்கி, ஒருத்தி சல்வார் கம்மீஸ் என்று நின்றவர்களிடையே அன்னியின் தங்கை யார்? கொஞ்ச நாட்களாகவே வீட்டில் தன் பெயரையும், அவள் பெயரையும் இணைத்துப் பேசுவதும், 'அவள் இந்த வருடப் படிப்பை முடிக்கட்டும்' என்று காத்திருப்பதும் அவனுக்குத் தெரியும்! தகப்பனாரின் கல்யாண ஏற்பாட்டுக்கு எவ்வித மறுப்பும் கூறாமல் தலையசைத்திருந்தான் அவன். இப்போது அவளே அவனுக்குக் கொஞ்ச தூரத்தில் நிற்கிறாள் என்னும்போது அவன் மனத்துள் ஒரு விநோதமான இனிமைச் சுரப்பு ஏற்பட்டது. இந்த எதிர்பாராத சந்திப்பு அவன் சிந்தையில் குதூகலத்தை நிரப்பி விட்டது.

''ஸ்ரீதர்!'' கோபாலின் குரல் கேட்டது.

''என்ன அண்ணா!''– அவன் உள்ளே சென்றபோது பெண்களின் பார்வைகள் மொய்த்தன.



''ரோஸ் செடிகள் வேண்டுமாம் இவர்களுக்கு ! நேரில் அழைத்துப் போய்த் தேவையானவற்றை எடுத்துத் தரச் சொல்.''

மெல்லிய விகசிப்பான சிரிப்பூடே வெட்க நடிப்பும், இரகசியக் கெகிகெப்புமாக அவர்கள் அவனைப் பின்தொடர்ந்தனர்.

ரோஜாப் பதியன்களும், தொட்டிகளும் வைக்கப்பட்டிருக்கும் பாத்திகளின் அருகே அவர்கள் நின்றனர்.

''எல்லா ரகத்திலும் ஒவ்வொரு செடி வாங்கிப் பாருங்களேன்'' என்று விற்பனையாளர் தோரணையில் அறிவுறுத்தினான் ஸ்ரீதர்.

''எனக்கு ரோஜா பற்றிய அறிவு பூஜ்யம். செடியின் பராமரிப்பு பற்றி எனக்கு எல்லா விஷயங்களையும் தெரிவிக்க வேண்டும் !'' என்றது மாக்ஸி.

''ஓ! பேஷா !'' என்றவாறே ஸ்ரீதர் பணியாள் ஒருவனை அழைத்து, வகைக்கு ஒரு ரோஜாச் செடியைப் பெயர்த்துக் கட்டித் தரும்படி சொன்னான்.

''நான்கு செடிகளுக்கும் எவ்வளவு ஆகிறது ?'' என்றது சல்வார் கம்மீஸ்.

''அதிகம் இல்லே. நூறு ரூபாய்தான்!''

''அம்மாடியோவ்!'' என்று ஒருத்தி விரிச்சிட்டாள். ''ஒரு செடி ஒரு ரூபாய் இருக்கும்னு நினைச்சேன் !''

''ரோஜா என்றால் அதற்கு ஒரு தனி விலை தான் ! அதிலும் இது நல்ல ரகம். கிடைப்பது அபூர்வம் !'' என்று விளக்கினான் அவன்.

''மிஸ்டர் ! எங்களில் உங்களுக்கு மிகவும் வேண்டிய ஒருத்தி இருக்கிறாள். அவளைக் கண்டுபிடிக்க முடியுமா?'' ஒருத்தி குறும்பாக இந்தக் கேள்வியைக் கேட்டு வைத்தாள்.

குபீரென்று ரத்தம் உடம்பெல்லாம் பரவிச் சூடேறுவது போலிருந்தது ஸ்ரீதருக்கு. இந்த ஐந்தாறு பேர்களில் அவனுக்குரியவளாகப் பெரியவர்கள் நிச்சயித்திருக்கும், 'அவள்' யார்? தன்னை அடையாளம் காட்டிக் கொள்ளாமலேயே, தனக்கு வரப் போகிறவனைத் தன் தோழிகளுக்குக் காட்ட அழைத்து வந்திருக்கிறாளோ ?

அவன் தன்னைச் சமாளித்தவாறே சிரித்தான். பிறகு பிறரை ஈர்க்கும் மென்மையான குரலில், ''அவளும் ஒரு ரோஜா ! தெரியாமல் இருக்குமா ?'' என்றான்.

''ஓஹோஹோ !'' என்று மற்றவர்கள் சிரித்தபோது ஒருத்தி மட்டும் நாணிக் கொண்டாள். அந்த ஒருத்தியே மற்றவர்கள் பார்வையில் மையமாக நின்றாள். ஸ்ரீதர் இனம் கண்டு கொண்டான். இளவண்ண மஞ்சள் நைலக்ஸ் புடவையில் அவள் மஞ்சள் ரோஜாவாகத் தோன்றினாள். அவள் முகத்தில் அளவான சிரிப்போடு வளமான ரோஜா வண்ணக் கலர் சுடர்விட்டது.

''ஊ, சரோஜா ! முன்பே இவர் உன்னைத் தெரிந்து வைத்திருக்கிறார்டி. அவருக்கு உன்னைத் தெரியாது என்றாயே !'' மற்றவர்களின் கேள்விக் கணைகள் அவளை நாண வசிகளாகத் தைத்தன.

''ஊ! ஸ்திரமான கல்யாணப் பாதுகாப்பு உண்டுங்கிற நிச்சயத்தில் இங்கே இரு உள்ளங்கள் ரகசிய உவகையோடு நிற்கின்றன. இந்த வண்ண ரோஜாப் பூக்களின் சந்நிதியில் ஒரு புதிய காதல் ரோஜா அரும்பு விட்டிருக்கிறது. இது தொடரட்டும்!''

கொல்லென்ற சிரிப்பு !

அவர்கள் கேலியால் பாதிக்கப்பட்ட தன் மன நிலையை மீட்டவாறே ஸ்ரீதர் கூறினான்: ''நீங்கள் வாங்கியிருக்கும் ரோஜாக்களின் பெயர்களைக் கூறுகிறேன். ஆரஞ்சு கலர் ரோஸ் 'பிரின்ஸஸ்' வகையைச் சேர்ந்தது. பாம்பே க்ளைமேட்டில் இது ரொம்ப நன்றாகப் பூக்கும். சிவப்பு ரோஸ் 'ரெட் டெவில்' ரகம். வெள்ளை நிற ரோஸ் 'ஒயிட் கிறிஸ்துமஸ்' வகை. பிங்க் கலர் ரோஸ் 'பிங்க் பீஸ்' இனம்........''

''மஞ்சள் ரோஜா உங்களிடம் இல்லையா?''

''மஞ்சள் ரோஜா நம்ப க்ளைமேட்டுக்குச் சரியாக வளர்வதில்லே. அப்படிப் பூத்தாலும் சீக்கிரமே கலர் மாறி மங்கி விடுகிறது .... டேர்ரஸில் வைப்பதானால் ரோஜாத் தொட்டிகளை எடுத்துப் போகலாம்!''

அவன் தொடர்ந்து ரோஜாச் செடிகளைப் பராமரிக்கும் விதங்களை விவரித்துக் கொண்டு போனான். பெரிய லெக்சர்!

''அம்மாடி! இவ்வளவு நேரமும் சயன்ஸ் வகுப்பில் இருந்ததைப் போலவே இருந்தது டி!'' என்றாள் ஒருத்தி கேலியாக.

''சும்மா இருங்கடி !'' என்று முதன் முதலாக ஸ்ரீதரின் எதிரில் இதழ் மலர்ந்தருளினாள் சரோஜா.

''ஓ! சரோஜா பரிந்து பேச வந்துவிட்டாள் ! இனிமேல் நாமெல்லாம் வாயை மூடிக் கொள்ள வேண்டியதுதான் !''

அவர்கள் கேலிப் பேச்சுக்களைச் செவிமடுக்காமல் ஸ்ரீதர் மீண்டும் சொன்னான். ''சிரமம் எடுக்காவிட்டால் எந்தக் காரியமும் வெற்றியளிப்பதில்லையே! சிரத்தையும், ஈடுபாடும் இருந்தால் ஒரு மாதத்திலேயே வளங் கொழிக்கும் பூக்கள்! செடிகள் அங்கே ஆபீஸ் அறைக்குப் போய்விட்டன. போய்ப் பெற்றுக் கொள்ளுங்கள்.''

''தேங்க் யூ ஸார் !'' என்று எல்லோரது ஒருங்கிணைந்த குரல்களும் ஒலித்தன.

சகஜமான பேச்சும், ரகசியச் சிரிப்புமாகச் செல்லும் அவர்களிடையே ஒருத்தியின் நடை மட்டும் தயங்கித் தள்ளாடியது. மெல்லத் திரும்பிய அவள் விழிகள் அவன் கண்களைச் சந்தித்தபோது பளீரென்று ஒரு மின்னல் வெட்டியது. ஸ்ரீதர் ஒரு மென்னகையைப் பதிலிறுத்தான். ''ஒரு நிமிஷம்'' என்று அவளுக்கு மட்டும் கேட்கும்விதமாக அவன் கூறியபோது அவள் பிரமிப்போடு நின்றாள்.

'' நாளை அண்ணா இங்கு வர மாட்டார். நான்தான் இருப்பேன். இதே நேரம் வர முடியுமா ?''

அவள் கண்கள் நிமிர்ந்தன; தாழ்ந்தன.

அடுத்த நாள் மாலை நர்ஸரியில் எந்த வேலையிலும் மனம் லயிக்காமல் உட்கார்ந்திருந்தான் ஸ்ரீதர். தெருப்புற கேட் கிரீச்சிட்டாலோ, பேச்சொலி கேட்டாலோ அவன் பரபரப்படைந்தான். நேரம் ஆக ஆக அவன் எதிர்பார்ப்பும் ஒளி மங்கி இருள் சூழ்வது போலவே ஆகிவிட்டது.

'அவள் ஏன் வரவில்லை?' என்ற அழுத்தமான கேள்வி அவனுள் புறப்பட்டது.

பரிசுத்தமான பாலினால் செய்யப்பட்டது



காட்பரிஸ் சாக்கலேட்

சுவையானது
மட்டுமல்ல...
போஷாக்கு
அளிக்கவும் வல்லது!

Cadbury's
MILK
CHOCOLATE

பரிசுத்தமான பால்,
சத்துள்ள கொகோ,
இவையுடன் சர்க்கரையின்
இனிப்பு — அதுவே
காட்பரிஸ் மில்க் சாக்கலேட்!



காட்பரிஸ்

ஒவ்வொரு சாக்கலேட்டும்
பாலின் குணங்கள் அடங்கியது!

AIYARS-C.142 TM

# உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்கு வைடமின்களும், தாதுப் பொருள்களும் இன்றியமையாதவை.

*அவை போதுமான அளவில் கிடைக்கின்றனவா?*



வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின் பற்றுக்குறை உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்தைப் பாதிக்கக்கூடும். சோர்வு, ஜலதோஷம், பசியின்மை, உடல் இளைத்துப்போதல், சரும உபாதைகள், மற்றும் பல் உபாதைகள். இவற்றிற்கு மூலகாரணம் சாதாரணமாக, இன்றியமையாத வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின் பற்றுக்குறைதான். இருப்பினும், வைடமின்களும், தாதுப் பொருள்களும் பெரும்பாலும் அலட்சியம் செய்யப்படுகின்றன. மிகவும் கவனமாகத் திட்டமிடப்பட்ட உணவில் கூட இவற்றின் பற்றுக்குறை காணப்படுகிறது. வளமான உணவு எல்லாம் சரிவிகித உணவாக இருப்பதில்லை; விதவிதமான உணவுகளிலும், வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின் பற்றுக்குறை இருக்கக் கூடும். அப்படியானால், அத்தியாவசியமான வைடமின்களும், தாதுப் பொருள்களும் – அதுவும் சரியான விகிதங்களில் – உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கின்றன என்று நிச்சயமாக எப்படிச் சொல்ல முடியும்?

உங்கள் குடும்பத்தில் ஒவ்வொருவருக்கும், தேவையான அளவுகளில் இந்த இன்றியமையாத போஷாக்குச் சத்துக்கள் கிடைப்பதை உறுதிப் படுத்திக் கொள்ள, அவர்களுக்கு விம்க்ரான் – ஸ்க்விப் பல்வேறு வைட்டமின். தாதுச் சத்து மாத்திரைகள் –கொடுங்கள், தினம் ஒரு மாத்திரை வீதம். இந்த ஆரோக்கியமான வழக்கத்தை இன்றே ஏன் ஆரம்பிக்கக்கூடாது?

விம்க்ரானில் 11 முக்கியமான வைடமின்களும், 8 தாதுப் பொருள்களும் சரியான அளவுகளில் அடங்கியிருக்கின்றன. இரத்தச் சிவப்பு உயிரணுக்களை வளர்க்கவும், சக்தியை மீண்டும் பெற உதவவும் இரும்புச் சத்து – எலும்புகளையும், பற்களையும் உறுதியாக வைத்திருக்க கால்ஷியம் – ஜலதோஷத்தை எதிர்க்கும் சக்தியை அதிகரிக்க வைடமின் ஸி – சிறந்த கண் பார்வைக்கும், ஆரோக்கியமான சருமத்திற்கும் வைடமின் ஏ – பசியைத் தூண்டி, தாங்கும் சக்தியை அதிகரிக்கும் வைடமின் பி – 12 – இவற்றுடன், உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்குத் தேவையான, இதர போஷாக்குச் சத்துக்களும் அடங்கியிருக்கின்றன.

## விம்க்ரான்®

பல்வேறு வைட்டமின்-தாதுச் சத்து மாத்திரைகள்

**11 வைட்டமின்களும் 8 தாதுப் பொருள்களும் அடங்கியது.**

**ஒரே ஒரு விம்க்ரான் மாத்திரை உங்களை நாள் முழுதும் சக்தியுடன் வைத்திருக்கப் போதுமானது.**

இந்தத் திருமண ஏற்பாட்டில் அவளுக்கு விருப்பமில்லையோ? அப்படியானால் தன் தோழிகளிடம் அதைத் துணிந்து கூறி இங்கு அழைத்து வந்திருக்க மாட்டாளே....

''தம்பி! நாளன்னிக்கு நிச்சயதார்த்தம் வைச்சிருக்கு. ஞாயிற்றுக்கிழமை திருமணம். அழைப்பிதழ் நன்றாக இருக்கிறதா, பார்!'' என்று அண்ணி ஸ்ரீதரிடம் அழைப்பிதழ்களைத் தந்தாள்.

''அண்ணி!'' மிகத் தயங்கினான் அவன். ''இந்த ஏற்பாட்டில் உங்கள் தங்கைக்குப் பூரண சம்மதம்தானே?''

''இது என்ன சந்தேகம், தம்பி! உன்னைப் போல்தான் அவளும். அப்பா, அம்மா சொல்லுக்குக் கட்டுப்பட்டவள். மறுக்க ஒன்றுமில்லை.''

''இருந்தாலும் நீங்களாவது தனியாக அவளிடம் ஒரு வார்த்தை கேட்டு விடுங்கள்.''

''ஆகட்டும். உன் பிரியத்துக்கு அவளைக் கேட்டால் ஆயிற்று!'' சிரித்தாள் அண்ணி.

அன்று மாலையே அண்ணி தன் தங்கையின் விருப்பத்தைத் தெரிவித்து விட்டாள். இப்போது ஸ்ரீதருக்குக் குறுங் கோபம் ஊடியது. அன்று நர்ஸரிக்கு வரச்சொன்னபோது அவள் ஏன் வரவில்லை?

திருமணக் குதூகலத்தில் ஒன்ற முடியாமல் அவனை இந்தப் பிரச்னை நெருடிக் கொண்டிருந்தது. திருமணப் பந்தலில் யாரெல்லாமோ மகிழ்ச்சியுடன் உலாவும்போது அவன் மட்டும் கொஞ்சம் துடிப்புற்றுத்தான் இருந்தான்.

சரோஜா அந்த வீட்டு மருமகளாகிவிட்டாள்! ஆசைகளின் பெருமிதத்துடன், அன்பின் பெருமிதத்துடன் தன்னருகே நின்றவளை ஏறிட்டுப் பார்த்தான் அவன். அவள் சிரம் தரை தாழ்ந்தது.

''அன்று நர்சரிக்கு வரச் சொன்னேனே, ஏன் வரவில்லை?'' அவன் சாதாரணமாகக் கேட்க முயன்றாலும் குற்றம் சாட்டும் பாவனை அதில் தொற்றிக் கொண்டது.

அவளுக்கு அந்தச் சூழ்நிலையில் அச்சம் ஏற்பட்டது. தன்னைச் சமாளித்தவாறே அவள் கூறினாள்: ''ஏதோ ஒரு தைரியத்தில், என் தோழிகள் தந்த ஊக்கத்தால், ரோஜாப் பதியன்கள் வாங்கும் சாக்கில் உங்களைப் பார்க்கலாம் என்று வந்து விட்டேன். நீங்களும் என்னைக் கண்டு கொண்டபின், திருமணத்துக்குப் பிறகு சந்திப்பதே சரி என்று தோன்றியது. அப்போது ஏனோ அது தவறாகப்பட்டது. இப்போது யோசித்தால் வந்திருக்கலாமே என்று தோன்றுகிறது...''

அவளது சாதுரியமான, மென்மையான பதிலைக் கேட்டு அவன் சிரித்துவிட்டான். சரோஜா கெட்டிக்காரிதான்!

''நீங்கள் நம்பவில்லையா?''

''நம்பாமல் என்ன? நீ ச...ரோஜாவாயிற்றே? அதிலும் அபூர்வமான மஞ்சள் ரோஜா.....''

''என் பெயரில் ரோஜான்னு இருக்கிறதினாலேதான் என்னைப் பிடித்திருக்கிறதோ?''

''உன்னிடம் எல்லா மலர்களின் சாயலும் இருக்கிறது சரோஜா! மலர்களாலேயே உன்னை வர்ணிக்கணும்னா நீ மஞ்சள் ரோஜா மட்டுமல்ல! உன் கண்கள் க்ரிசாந்தமம்ஸ், இதழ்கள் வில்லிப் பூக்கள், நீண்ட நாசி பெல் ஃப்ளவர்ஸ், காது மடல்கள் சூர்ய காந்திப் பூக்கள், மேனி நிறம் சண்பகம்....''

சரோஜா குறுக்கிட்டாள். ''இப்படி ஒரு கற்பனை பண்ணிப் பார்த்தால் நானே என்னைக் கண்டு பயந்துவிடுவேன். உணர்ச்சியுள்ள ஒரு பெண்ணைக் கதம்ப மலர்க் குவியலாக்கிவிட்டீர்களே.... அவரவர்கள் துறையில் ஈடுபாடு கொண்டவர்கள் எல்லாம் இப்படித்தான் பைத்தியமாக...'' சட்டென்று பல்லைக் கடித்துக் கொண்டாள் அவள்.

''ஏன் சரோஜா! ஏன் நிறுத்திவிட்டாய்? என்னைப் பைத்தியம்னுதானே சொல்ல வரே. நான் ரோஜாப் பைத்தியம்தான்... சரோஜா பைத்தியம்!''

''போதுமே!'' நாணிச் சிணுங்கினாள் அவள்.

## பாரதியின் பாரதத் தாய்



பாரத தேவிக்கு ஒரு வடிவம் வேண்டும் என்று உணர்ந்த பாரதியார், சிறந்த ஓவியர் ஒருவரிடம் தமது கருத்தைக் கூறினார். அதன்படியே ஓர் ஓவியம் எழுதி வாங்கிக் கொண்டார். பின்பு அதை ஒரு சிற்பியிடம் கொடுத்து அப்படியே ஒரு சிலையும் செய்யச் சொன்னார். அந்தச் சிலையில் பாரதத் தாயாருக்கு எல்லா நகைகளும் பூட்டுவதோடு விலங்கும் பூட்ட வேண்டும் என்றார்.

'விலங்குகள் பூட்டப்படும் சிலைக்கு - வறுமையில் உழலும் பாரதத் தாய்க்கு நகை என்ன வேண்டிக் கிடக்கிறது' என்று வ. வே. சு. ஐயரும், மகான் அரவிந்தரும் பாரதியாரிடம் கேட்டார்கள். அதற்குப் பாரதியார் உணர்ச்சி வசப்பட்டவராய், ''இமய மலையையா தூக்கிச் சென்றுவிட்டான் வெள்ளையன்? கங்கை நதி, காவிரி நதியை எல்லாமா எடுத்துக்கொண்டு போய்விட்டான்? இவை எல்லாம்தான் என் தாயின் செல்வங்கள்! வற்றாத வளம் தரும் மலையும் நதியும் காடுகளும் உள்ளவரை பாரததேவி செல்வங்கள் உள்ளவள்தானே! ஓ சிற்பியாரே, அன்னைக்கு எல்லா நகைகளும் பூட்டும்; அதோடு விலங்கும் இருக்கட்டும்'' என்றாராம்.

அனுப்பியவர்: துறவி. ஆதாரம்: பாரதியும் தாகூரும்.

# சிவகாமியின் சபதம்

இருபத்திமூன்றாம் அத்தியாயம்

## இராஜ ஹம்சம்

நரசிம்மர் வெட்கமுற்றதைக் கண்டு அவருக்குத் தைரியம் சொல்பவர் போல் மகேந்திரர் கூறினார்: ''நரசிம்மா! ஆயனர் வீட்டுக்குள் போனால் அங்குள்ள சிற்பச் சித்திர அதிசயங்களில் எவருமே கண்ணையும் கருத்தையும் பறிகொடுப்பது இயற்கைதான். நானே அப்படித்தான் மெய்ம்மறந்துவிடுவது வழக்கம். இன்றைக்கு ஆயனர் வீட்டுக்குச் செல்லும் போதே சிறிது சந்தேகத்துடன் நான் சென்றபடியால் கூர்மையாகக் கவனித்தேன்.......''

நரசிம்மர் தம் மனக் குழப்பத்தைச் சமாளித்துக் கொண்டு, ''கவனித்ததில் என்ன கண்டீர்கள், அப்பா? சிற்பங்களையும் சித்திரங்களையும் தவிர, ஆயனர் வீட்டில் வேறொன்றையும் நான் காணவில்லையே?'' என்றார்.

''ஆயனரின் நடவடிக்கையில் உனக்கு எவ்விதமான சந்தேகமும் உண்டாகவில்லையா, நரசிம்மா!''

மாமல்லர் மௌனமாயிருந்தார்.

''அடிக்கடி அவர் கவலையுடன் புத்தர் சிலையின் பக்கம் திரும்பினாரே, அதைக் கவனிக்கவில்லையா?''

மாமல்லரின் கண்கள் அகன்று விரிந்தன.

''புத்தர் சிலைக்கு அருகில் நாம் சென்றதும், ஆயனர் தயங்கித் தடுமாறியதையும் நீ கவனிக்கவில்லையா?''

நரசிம்மர் திடுக்கிட்டவராய், ''அப்பா! அந்தப் பெரிய புத்த விக்கிரகத்துக்குப் பின்னால் ஒருவேளை யாராவது மறைந்திருந்தார்களா, என்ன?'' என்றார்.

''ஆம், நரசிம்மா! இரண்டு பேர் இருந்தார்கள்! அன்றிரவு இராஜவிஹாரத்துக்கு அருகில் ஒரு புத்த பிக்ஷுவை



யும் ஒரு வாலிபனையும் நாம் பார்க்க வில்லையா, அந்த இருவருந்தான்!''

''என்ன! அவர்களா ஆயனச் சிற்பி யார் வீட்டில் புத்தர் சிலைக்குப் பின்னால் ஒளிந்திருந்தார்கள்?''

''ஆம்; ஆனால், ஒளிந்து கொள்ளும் கலையை அவர்கள் அவ்வளவு நன்றாகக் கற்கவில்லை......''

''தங்களுக்கு மூன்றாவது கண் உண்டு என்பது அவர்களுக்கு எப்படித் தெரியும், அப்பா? ஆயனரின் வீட்டில் தாங்கள் அவ்வளவு நேரம் தங்கியது எனக்குச் சிறிது வியப்பை அளித்தது. இப்போது காரணம் தெரிகிறது!'' என்று நரசிம்மர் பெருமிதத்துடன் கூறினார். மகேந்திரர் இதற்கு விடையொன்றும் கூறாமல் கால்வாயின் மேற்குத் திசையை நோக்கினார்.

திடீரென்று, ''அப்பா! ஆயனர் வீட்டுக்கு நான் மறுபடியும் போய் வர விரும்புகிறேன்'' என்றார் மாமல்லர்.

''எதற்காக, நரசிம்மா?''

''அந்த வாலிபனைப் பார்த்து இந்த வேலை அவனிடம் ஒப்புவிக்க வேண்டும். புத்த பிக்ஷுவுடன் அன்றிரவு நாம் பார்த்த வாலிபன்தான் இந்த வேலுக்குரியவன் என்று தாங்கள் சொன்னீர்கள் அல்லவா?''

''அன்று ஊகித்துச் சொன்னேன்; இன்றைக்கு நிச்சயமாயிற்று. ஆனால், அந்த வாலிபனுக்கு இந்த வேல் இனிமேல் தேவையில்லை, நரசிம்மா! அதோ போகிறதே, ஆயுதப் படகு, அதிலுள்ள பழைய வேல்களுடன் இதையும் நீ சேர்த்து விடலாம்!''

''ஏன், அப்பா?''

''பரஞ்சோதி ஆயனரிடம் சிற்பக் கலை கற்கப் போகிறான்; அவனுக்கு வேல் வேண்டியதில்லை.''

''பரஞ்சோதி! — பரஞ்சோதி! — திவ்யமான பெயர்! அந்த வீர வாலிபனைப் பற்றி என்னவெல்லாமோ ஆசை கொண்டிருந்தேன். அவனை என் ஆருயிர்த் தோழனாகக் கொள்ள விரும்பினேன்!''

''அது நிறைவேறாது என்று நான் சொல்லவில்லையே!''

''எப்படி நிறைவேறும்? நம் பகைவர்களின் ஒற்றர்களுடன் நாம் தோழமை கொள்வது சாத்தியமா?''

''அந்த வாலிபனை நான் ஒற்றன் என்று சொல்லவில்லையே?''

'' பின் எதற்காக அவன் ஒளிந்து கொண்டான் ?''

'' அந்த வாலிபன் குற்றமற்றவன். அவனைக் கொண்டு அந்தக் கள்ள பிக்ஷு ஏதோ சூழ்வினை செய்யப் பார்க்கிறான் என்று தோன்றுகிறது. வாதாபி சாம்ராஜ்யத்தின் மகா சதுரனான ஒற்றன் அந்தப் பிக்ஷு என்று நான் ஊகிக்கிறேன் !''

''அப்பா! சில சமயம் தங்களுடைய நிதானப் போக்கு எனக்கு மிகுந்த வியப்பை அளிக்கிறது.''

'' எதைப் பற்றிச் சொல்கிறாய், நரசிம்மா !''

'' அன்றிரவே அந்தப் புத்தபிக்ஷுவைப் பற்றித் தாங்கள் சந்தேகம் கொண்டீர்கள். உடனே அவனை ஏன் சிறைப்படுத்தவில்லை? வெளியிலே விட்டு ஏன் வேடிக்கை பார்க்கிறீர்கள்?''

'' அன்றிரவு சிறைப்படுத்தியிருந்தால், பல்லவ ராஜ்யத்துக்கு ஏற்பட்டிருக்கும் ஒரு பெரிய அபாயம் எனக்குத் தெரியாமல் போயிருக்கும்.''

''பெரிய அபாயமா?'' என்று கூறி நரசிம்மர் ஆவலுடனும் பரபரப்புடனும் மகேந்திரரை நோக்கினார்.

''ஆம். அன்றிரவு நாம் புத்த பிக்ஷுவையும் வாலிபனையும் பார்த்தோம்; மறு நாள் காலையில் அவர்களை இராஜ விஹாரத்தில் காணவில்லை. ஆனால், அவர்கள் எந்தக் கோட்டை வாசலின் வழியாகவும் வெளியே போனதாகத் தெரியவில்லையல்லவா?''

''ஆமாம் !''



''அவர்கள் எப்படி மாயமாய் மறைந்திருக்கக் கூடுமென்று வியப்பாயிருக்கிறதல்லவா ?''

''ஆம், அப்பா !''

''கோட்டைக்கு வெளியே போக ஏதோ கள்ள வழி இருக்க வேண்டும் என்று சந்தேகித்தேன். அந்தக் கள்ள வழி எங்கே இருக்கிறதென்று சற்று முன்னால்தான் தெரிந்தது.''

''அதைப் பற்றி யோசித்ததனால் தான் குதிரையை அவ்வளவு வேகமாய் விட்டுக் கொண்டு வந்தீர்களா ?''

சக்கரவர்த்தி மௌனமாயிருந்தார்.

''கள்ள வழி எங்கே இருக்கிறது, அப்பா ?''

''இராஜ விஹாரத்தில் புத்தபகவானுடைய விக்கிரஹத்துக்குப் பின்னால் பார்க்க வேண்டும், நரசிம்மா !''

சக்கரவர்த்தியின் அறிவுக் கூர்மையைப் பற்றி நரசிம்மர் அளவற்ற



வியப்புக் கொண்டவராய்த் திகைத்து நிற்கையில், ''அதோ இராஜஹம்சம்!'' என்று மகேந்திரர் கூறியதைக் கேட்டு மேற்கே நோக்கினார். காஞ்சி நகர்ப் பக்கத்திலிருந்து மூன்று படகுகள் கால்வாயில் வந்து கொண்டிருந்தன. அவற்றில் நடுவில் வந்த படகு சங்கையொத்த வெண்ணிறமுடைய 'இராஜஹம்ச'த்தின் உருவமாக அமைக்கப்பட்டிருந்தது. அதில் ஒரு பக்கத்தில் அமைத்திருந்த தங்கச் சிங்காதனம் 'பளபள' வென்று மின்னிற்று. அதன் மேல் விசாலமான வெண் கொற்றக் குடை விரித்திருந்தது. எல்லாவற்றுக்கும் மேலே பல்லவ சாம்ராஜ்யத்தின் ரிஷபக் கொடி கம்பீரமாய்ப் பறந்து கொண்டிருந்தது.

முதலில் வந்த படகும், 'இராஜஹம்ச'மும் படகோட்டிகளைத் தவிர மற்றப்படி வெறுமையாயிருந்தன. கடைசியாக வந்த படகில் பலர் அமர்ந்திருந்தார்கள்.

''ஆ ! மந்திரி மண்டலத்தாரும் வருகிறார்களே! தாங்கள் வரச் சொல்லியிருந்தீர்களா?'' என்றார் நரசிம்மர்.

''ஆம்; இன்றைக்குத் துறைமுகத்தில் மந்திரி மண்டலம் கூடப் போகிறது. அதற்கு முன்னால் உன்னிடம் நான் சில விஷயங்கள் சொல்ல வேண்டும். அதோடு, உன்னிடம் ஒரு வாக்குறுதி கோரப் போகிறேன்'' என்றார் மகேந்திரர்.

நரசிம்மருக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவருடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டவளான சிவகாமி தாமரைக் குளக்கரையில் அவரிடம் வாக்குறுதி கேட்டு வாங்கிக் கொண்டு ஒரு முகூர்த்த நேரம்கூட ஆகவில்லை. அதற்குள் அவருடைய அன்புக்கும் பக்திக்கும் உரியவரான தந்தை வேறு வாக்குறுதி கேட்கிறார்.

இவ்விதம் மாமல்லர் யோசித்துக் கொண்டிருக்கும் போதே படகுகள் மூன்றும் அவர்கள் இருந்த இடத்தை நெருங்கின.

## இருபத்துநான்காவது அத்தியாயம்

# வாக்குறுதி

சக்கரவர்த்திக்குப் பின்னால் கால் நடையாக வந்த இராஜ பரிவாரங்களும் இதற்குள்ளே கால்வாயின் கரைக்கு வந்து விட்டன.

''மகா ராஜாதி ராஜ திரிபுவன சக்ரவர்த்தி குணபர மகேந்திர பல்லவேந்திரர் வாழ்க!'' என்ற கோஷம் மந்திரி மண்டலத்தார் வீற்றிருந்த படகிலேயிருந்து கம்பீரமாக எழுந்தது.

''மகா ராஜாதி ராஜ அவனிசிம்ம லளிதாங்குர சத்துருமல்ல விசித்திர சித்த மத்த விலாச சித்திரக்காரப் புலி குணபர மகேந்திர பல்லவேந்திரர் வாழ்க !'' என்ற கோஷம் கரையிலிருந்து எழுந்தது.

''குமார சக்கரவர்த்தி மாமல்லர் வாழ்க!'' என்ற கோஷம் இரு பக்கங்களிலிருந்தும் எழுந்து வானளாவியது.

சங்கங்களும், எக்காளங்களும் காது செவிடுபடும்படி முழங்கின. முரசங்

களும் பேரிகைகளும் எட்டுத் திசையும் அதிரும்படி ஆர்த்தன.

மகேந்திர பல்லவரைத் தொடர்ந்து வந்த வீரர்கள் முன்னால் வந்த படகிலே ஏறி அமர்ந்தார்கள்.

சக்கரவர்த்தியும் குமாரரும் குதிரைகளை ஏவலாளரிடம் ஒப்புவித்துவிட்டு, 'இராஜ ஹம்ச'த்தில் ஏறி வெண்கொற்றக் குடையின் கீழ் தங்கச் சிங்காதனத்தில் அமர்ந்தார்கள்.

படகுகள் மூன்றும் துறைமுகத்தை நோக்கிப் புறப்பட்டன.

**வா**த்திய முழக்கங்கள் நின்றதும், சக்கரவர்த்தி தம் குமாரரைப் பார்த்து, ''நரசிம்மா! நான் உன்னிடம் வாக்குறுதி கேட்பதே உனக்கு விந்தையாயிருக்கும். அதற்கு நீ உடனே மறுமொழி கூறுவதும் நியாயம்தான். விஷயம் இன்னதென்று தெரிந்து கொள்ளாமல் எந்த வாக்குறுதியும் கொடுக்கக் கூடாது. இராஜ்யம் ஆளும் பொறுப்பு உடையவர்கள் இதில் சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்!'' என்றார்.

''அதற்காக நான் தயங்கவில்லை, அப்பா! தாங்கள் என்னிடம் வாக்குறுதி கேட்க வேண்டுமா என்றுதான் யோசனை செய்து கொண்டிருந்தேன். எனக்குத் தாங்கள் கட்டளையிடுவது தானே முறை? தங்கள் விருப்பத்துக்கு மாறாக எப்போதாவது நான் நடந்ததுண்டா?''

இந்த வார்த்தைகள் குமார சக்கரவர்த்தி இருதய பூர்வமாகக் கூறியவையானபடியால் அவருடைய நாத் தழுதழுத்தது.

மகேந்திரரும் உணர்ச்சி மிகுதியால் சும்மா இருந்து விட்டு, பிறகு கூறினார்: ''பல்லவ சிம்மா! நான் எவ்வளவு கசப்பான கட்டளையிட்டாலும் நீ நிறைவேற்றுவாய் என்று எனக்குத் தெரியும். ஆனாலும் காரியத்தின் முக்கியத்தைக் கருதி உன்னிடம் வாக்குறுதி பெற வேண்டியிருக்கிறது. அதற்கு முன்னால் நான் உனக்குச் சில முக்கியமான விஷயங்களைச் சொல்லியாக வேண்டும். நாளை மறுநாள் நான் வடக்கே போர் முனைக்குக் கிளம்புகிறேன். எப்போது திரும்பி வருவேன் என்று சொல்வதற்கில்லை....''

''அப்பா! என்ன சொல்கிறீர்கள்? போர் முனைக்குத் தாங்கள் கிளம்புகிறீர்களா? என்னை இங்கே விட்டுவிட்டா?'' என்று மாமல்லர் ஆத்திரத்துடன் கேட்டார்.

''நான் சொல்ல வேண்டியதை யெல்லாம் சொல்லிவிடுகிறேன், நரசிம்மா! பிறகு நீ கேட்க வேண்டியதைக் கேட்கலாம்'' என்று சக்கரவர்த்தி கூறியதும் நரசிம்மர் மௌனமாயிருந்தார்.

மகேந்திரர் பிறகு கூறினார்: ''இந்தப் புராதனமான பல்லவ சாம்ராஜ்யத்தில் யுத்தம் என்று நடந்து வெகு காலம் ஆகிவிட்டது. இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் நான் இந்த ராஜ்யத்தின் பொறுப்பை ஏற்றுக் கொண்டேன். பிறகு இதுவரை யுத்தம் என்பதே நடக்கவில்லை. என் தந்தை சிம்மவிஷ்ணு மகாராஜாவின் காலத்திலும் பெரிய யுத்தம் நடந்தது கிடையாது. அவருடைய ஆட்சியின் ஆரம்பத்தில் சோழ நாட்டுக்கும் பாண்டி நாட்டுக்கும் நடுவில் புல்லுருவியைப் போல் கிளம்பியிருந்த களப்பாள வம்சத்தைத் தொலைத்து



உறையூர்ச் சிம்மாசனத்தில் சோழ வம்சத்தை நிலைநாட்டினார். அதன் பிறகு பல்லவ சைனியங்களுக்கு வேலையே இருக்கவில்லை. இப்போதுதான் முதன் முதலாக என் காலத்தில் யுத்தம் வந்திருக்கிறது. இதை என் இஷ்டப்படி நடத்துவதற்கு மந்திரி மண்டலத்தாரின் அனுமதி கோரப் போகிறேன். அதற்கு நீயும் அனுமதி கொடுக்க வேண்டும். இந்த யுத்தத்தில் வெற்றியோ தோல்வியோ, எது நேர்ந்தாலும் என் தலையோடு போகட்டும். உனக்கு அதில் பங்கு வேண்டியதில்லை...''

இத்தனை நேரம் பொறுமையோடு இருந்த நரசிம்மர் இப்போது குறுக்

கிட்டு, ''அப்பா! தோல்வி என்ற வார்த்தையை ஏன் சொல்லுகிறீர்கள்? யுத்தத்தில் நாம் அடையக் கூடியது வெற்றி அல்லது வீர மரணம்தானே? அதில் எனக்குப் பங்கு எப்படி இல்லாமற்போகும்?'' என்று கேட்டார்.

''வீர பல்லவ குலத்துக்கு உகந்த வார்த்தை கூறினாய், நரசிம்மா! வெற்றி அல்லது வீர மரணம்தான் நம் குல தர்மம். ஆனால் வீர மரணத்தை நாம் இரண்டு பேரும் சேர்ந்தாற்போல் தேடி அடைய வேண்டியதில்லை. ஒருவர் செய்த தவறுகளைத் திருத்த இன்னொருவர் உயிர் வாழ வேண்டுமல்லவா? ஒருவருக்காகப் பழி வாங்குவதற்கு மற்றொருவர் இருக்க வேண்டுமல்லவா?''

'' அப்பா! போர் முனையிலிருந்து ஏதோ ரொம்பவும் கெடுதலான செய்தி



வந்திருக்கிறது; — அதனால்தான் இப்படியெல்லாம் தாங்கள் பேசுகிறீர்கள்.''

''ஆம், குழந்தாய்! கெடுதலான செய்திதான் வந்திருக்கிறது. கங்கபாடிப் படை புலிகேசிக்குப் பணிந்து விட்டது, நரசிம்மா! வாதாபிச் சைனியம் வட பெண்ணையை நோக்கி விரைந்து முன்னேறி வந்து கொண்டிருக்கிறது.''

''இவ்வளவுதானே அப்பா? துடைநடுங்கி துர்விநீதனிடம் அதை நாம் எதிர்பார்க்கக் கூடியதுதான். அதனால் என்ன? வட பெண்ணைக் கரையில் நமது வடக்கு மண்டலத்துச் சைன்யம் அணிவகுத்து நிற்கிறதல்லவா? வேங்கியிலிருந்து என் மாமன் பெரும் படையுடன் கிளம்பி வருகிறாரல்லவா?''

''நரசிம்மா! வேங்கி சைனியம் நமது உதவிக்கு வராது. புலிகேசியின் சகோதரன் விஷ்ணுவர்த்தனன் இன்னொரு பெரும் படையுடன் வேங்கியை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறானாம்.''

''ஆஹா! வாதாபி சைனியம் அவ்வளவு பெரியதா? நாம் மட்டும் ஏன்...'' என்று மாமல்லர் ஆரம்பித்து இடையில் நிறுத்தியபோது அவருடைய குரலில் ஏமாற்றம் தொனித்தது.

''அது என் தவறுதான் நரசிம்மா! என் வாழ்நாளில் இப்படிப்பட்ட ஒரு யுத்தம் வருமென்று நான் எதிர்பார்க்கவில்லை. போர்க் கலையில் கவனம் செலுத்த வேண்டிய காலத்தை யெல்லாம் ஆடலிலும் பாடலிலும் சிற்பத்திலும் சித்திரத்திலும் கழித்து விட்டேன்...''

''அதனால் என்ன அப்பா! சற்று முன்னால் ஆயனர் சொன்னாரே? உலகத்தில் எத்தனையோ சக்கரவர்த்திகள் இருந்தார்கள்; மறைந்தார்கள். அவர்களுடைய பெயர்களைக்கூட உலகம் மறந்து போய்விட்டது. ஆனால் தங்களுடைய பெயரை என்றென்றைக்கும் உலகம் மறக்க முடியாது.''

''ஆயினும் இந்த யுத்தத்தில் நாம் ஜயிக்காமல் போனால் மாமல்லபுரத்து மகத்தான சிற்பங்கள் எல்லாம் என்றைக்கும் நமது அவமானத்துக்கே சின்னங்களாக விளங்கும்!''

''ஒரு நாளும் இல்லை. யுத்தத்தில் தோல்வி யடைந்து உயிரையும் வைத்துக்கொண்டிருந்தால் அல்லவா தாங்கள் சொல்கிறபடி ஏற்படும்? போர்க்களத்தில் புறம் காட்டி ஓடி ஒளிந்துகொள்கிறவர்களை யல்லவா உலகம் பழித்து நிந்திக்கும்? வீர மரணத்துக்கு ஆயத்தமாயிருக்கும்போது, அவமானத்துக்கும் பழிக்கும் நாம் ஏன் பயப்பட வேண்டும்?'' என்று மாமல்லர் ஆத்திரத்துடன் கூறினார்.

''முடிவில் போர்க் களத்தில் வீர மரணம் இருக்கவே இருக்கிறது. ஆனால், அதற்கு முன்னால் நம் பகைவர்களை வேரோடு அழித்து வெற்றியடையவே பார்க்க வேண்டு மல்லவா? அது அப்படி அசாத்தியமான காரியமில்லை. அவகாசம் மட்டும்தான் வேண்டும்; வாதாபி மன்னன் யுத்த தந்திரத்தை நன்கு அறிந்திருக்கிறான் நரசிம்மா! ஆனாலும் முடிவில் அவனை முறியடித்து நாம் வெற்றி மாலை சூடுவோம்; சந்தேகமில்லை. இதற்கு உன்னுடைய பூரண உதவி எனக்கு வேண்டும். நான் சொல்லுவது உனக்குப் பிடித்தாலும் பிடிக்கா

கூட்டுறவே ! நாட்டுயர்வு !!

**17½%** தீபாவளி விசேஷ தள்ளுபடி 25-9-73 முதல் 29-10-73 முடிய

## கண்கவர் காஞ்சிபுரம் பட்டுச் சேலைகள்
## பாவாடை, ரவிக்கை ரகங்களுக்கு

விஜயம் செய்யுங்கள்

# காஞ்சிபுரம் ஸ்ரீ வரதராஜஸ்வாமி பட்டு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு உற்பத்தி விற்பனை சங்கம் லிமிடெட் - No. G. 2105

**437, காந்தி ரோட், காஞ்சிபுரம் - 1. போன் : 627**

R. வாசுதேவமூர்த்தி
கைத்தறி அலுவலர்-செயலர்

K. N. ராமு
தலைவர்

---

## ஆஸ்துமா
### நிவாரண மூலிகை

ராஜஸ்தான் பிரபல அரசியல் சமூகத் தலைவர் காலஞ்சென்ற ஸ்ரீ சம்புநாத் அவர்களின் பேரன் **ஸ்ரீ கேசவ் மோஹன் லால்** ஏழைகளுக்கு ஆஸ்துமா நிவாரண மூலிகை விநியோகிக்கிறார். ஸ்ரீ சம்புநாத் அவர்களுக்கு இந்த மூலிகை ஒரு சந்நியாசியால் கொடுக்கப்பட்டு கடந்த 40 ஆண்டுகளாக இலவசமாக விநியோகிக்கப்பட்டது. இத்தன்னலமற்ற சேவைக்கு அரசாங்கம் உபகாரச் சம்பளம் அளித்தது. ஆனால் இந்த நற்பணியை அவர் தன் பேரனிடம் ஒப்படைத்து விட்டு துறவியானார். தற்பொழுது இப்பணியை பேரன் நடத்துவதோடு இதற்குப் பண உதவி செய்யுமாறு தனவந்தர்களைக் கேட்டுக் கொள்கிறார். மூன்று டோஸ் மருந்து சாப்பிட்டதுமே ஆஸ்துமாவிலிருந்து அவதியுறும் பலர் நிவாரண மடைந்துள்ளனர். ஆஸ்துமாவினால் அவதியுறு பவர்கள் மூலிகைக்கு கீழ்க்கண்ட விலாசத்திற்கு ஆங்கிலத்தில் எழுதவும்.

**SRI KESHAV MOHAN LAL**
P. B. No. 11463
CALCUTTA-6

NAA/K/72

---

## 1898
முதல் பிரசித்தி பெற்றது

பண்டிட் D. கோபாலாசார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்கியத்திற்கும் பலத்திற்கும்

## ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிமிடெட் - சென்னை-17.

# இலவசம்!




## புத்தம் புதிய போர்ஹென்ஸ் புத்தகம்—'பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை'.

இந்த விவரமான வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெறுங்கள்!
இன்றே இக் கூப்பனை அனுப்புங்கள்.

மானேர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை எண் 10031, பம்பாய் 1.

''பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை'' என்னும் போர்ஹென்ஸ் புத்தகத்தின்* ஒரு பிரதியை இலவசமாக எனக்கு அனுப்பவும் தபால் செலவுக்காக 25 காசு தபால் தலை அனுப்பியுள்ளேன்.

பெயர் ________________ வயது ________ K.6.BA

முகவரி ________________________________

________________________________

*எந்த மொழியில் புத்தகம் வேண்டுமோ, அதன் கீழ் கோடிடவும்.
ஆங்கிலம், இந்தி, மராட்டி, குஜராத்தி, உருது, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ், தெலுங்கு, மலையாளம் அல்லது கன்னடம்.

**போர்ஹென்ஸ்** பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

100F-152 TAM

விட்டாலும் அதன்படி நீ நடக்க வேண்டும்...''

நரசிம்மர் மிக்க உணர்ச்சியோடும், உருக்கத்தோடும் தழுதழுத்த குரலில், ''அப்பா! என்னிடம் தாங்கள் உதவி கோர வேண்டுமா? தாங்கள் என் அன்புக்குரிய அருமைத் தந்தை மட்டுமல்ல; என் உடல் பொருள் ஆவிக்கு உரிமையுடைய அரசர்; எனக்கு எப்பேர்ப்பட்ட கட்டளையையும் இடுவதற்கு அதிகாரமுள்ள பல்லவ சாம்ராஜ்யத்தின் பிரதம சேனாதிபதி. எவ்வளவு கசப்பான கட்டளை வேண்டுமானாலும் இடுங்கள்; நிறைவேற்றக் காத்திருக்கிறேன்'' என்றார்.

மகேந்திரர் சற்று மௌனமாயிருந்தார். அப்போது கீழ்த் திசையில் சிறிது தூரத்தில் கடற்கரைத் துறைமுகத்தின் காட்சி தென்பட்டது. கப்பல்களின் மேல் கம்பீரமாகப் பறந்த ரிஷபக் கொடிகள் வானத்தை மறைத்தன. சற்றுத் தென்புறத்தில் நெடுந்தூரம் பரவி நின்ற மாமல்லபுரத்துக் குன்றுகள் காட்சியளித்தன.

சிறிது நேரம் அந்தக் காட்சியில் கவனம் செலுத்திக் கொண்டிருந்த மகேந்திரர், சட்டென்று நரசிம்மரின் பக்கம் திரும்பி, ''மாமல்லா! நாளை மறுநாள் நான் போர்க் களத்துக்குக் கிளம்புகிறேன் என்று சொன்னேனல்லவா? போர்க்களத்திலிருந்து திரும்பி வந்து இந்த மாமல்லபுரத்தில் நாம் ஆரம்பித்த சிற்ப வேலை பூர்த்தியாவதைக் காண்பேன் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது'' என்றார்.

நரசிம்மர் மௌனமாக இருக்கவே, மகேந்திரர் மேலும் கூறினார்: ''அப்படி ஒருவேளை நான் திரும்பி வராவிட்டால் இந்தச் சிற்பப் பணியை நீதான் தொடர்ந்து நடத்திப் பூர்த்தி செய்ய வேண்டும்.''

''இந்த வாக்குறுதியைத்தானா என்னிடம் கோரினீர்கள்?'' என்று மாமல்லர் வெடுக்கென்று கேட்டபோது அவருடைய குரலில் ஆத்திரமும் வெறுப்பும் தொனித்தன.

''இல்லை. அதைக் கேட்கவில்லை. நான் ஒருவேளை போர்க்களத்திலிருந்து திரும்பி வராவிட்டால் எனக்காக நீ பழிக்குப் பழி வாங்க வேண்டும். புலிகேசியின் படையெடுப்பினால் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு ஏற்பட்ட அவமானத்தையும் பழியையும் துடைக்க வேண்டும்.''

''அது என் கடமையாயிற்றே? கடமையை நிறைவேற்றுவதற்கு வாக்குறுதி வேண்டுமா?''

''குமாரா! அவ்விதம் பழிக்குப் பழி வாங்குவதற்காக நீ உன் உயிரைப் பத்திரமாய்க் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.''

நரசிம்மர் மௌனமாயிருந்தார். இன்னும் ஏதோ வரப் போகிறதென்று அவர் கவலையுடன் எதிர்பார்த்ததாகத் தோன்றியது.

''குழந்தாய்! சென்ற ஐந்நூறு ஆண்டு காலமாக வாழையடி வாழையாக வந்திருக்கும் இந்தப் பல்லவ குலம் இனியும் நீடிப்பது உன் ஒருவனையே பொறுத்திருக்கிறது. உன்னிடம் நான் கேட்கும் வாக்குறுதி இதுதான்: நான் திரும்பி வரும்வரையில் அல்லது நான் திரும்பி வரமாட்டேன் என்று நிச்சய



மாய்த் தெரியும் வரையில் நீ காஞ்சிக் கோட்டையிலேயே இருக்க வேண்டும். எக்காரணத்தை முன்னிட்டும் கோட்டைக்கு வெளியே வரக் கூடாது. இதோ என் கையைத் தொட்டுச் சத்தியம் செய்து கொடு'' என்று கூறி மகேந்திரர் தம் வலக் கரத்தை நீட்டினார்.

நரசிம்மர் அவருடைய நீட்டிய கையைத் தொட்டு ''அப்படியே ஆகட்டும் அப்பா! தாங்கள் திரும்பி வரும் வரையில் காஞ்சிக் கோட்டையிலேயே இருப்பேன்!'' என்றார்.

திடீரென்று தூரத்தில் சமுத்திரம் 'ஹோ' என்று ஆங்காரத்துடன் இரையும் பேரொலி கேட்டது.

மாமல்லரின் உள்ளத்திலும் ஆர்கவியின் அலைகளைப் போல் எத்தனை எத்தனையோ எண்ணங்கள் தோன்றி மறைந்தன. (தொடரும்)



# கடவுளை ஏசியவர் கண்ணனின் தாசரானார்!

இறை வழிபாட்டிலே ஈடு இணையற்றவர்கள் நகரத்தார் வருப்பினர். ஆண்டவனுக்கு ஆலயங்கள் அமைக்கும் அறப் பணியே அரும் பணியென்று உணர்ந்து ஆயிரமாயிரமாக அள்ளி அள்ளி வழங்கியவர்கள். திரைகடலோடித் திரட்டிய நிதியத்தின் பெரும் பகுதியை இறை பணிக்கு ஈந்து இன்பக் களிப்பு எய்தியவர்கள். அத்தகைய சிறப்பு மிகு நகரத்தார் குலத்தோன்றல் கவிஞர் கண்ணதாசன் இளமைதொட்டே இறை புணர்வு மிக்கவராக இருந்தாரெனினும் இடைக் காலத்தில் அவர் நாத்திக வாதம் பேசி வந்ததைத் தமிழகம் அறியும். அவர் மீண்டும் ஆத்திகராக மாறிய வரலாற்றினைக் கேட்கலாமென்று அவரது இல்லத்துக்குச் சென்றேன்.

குங்குமதிலகம் பளிச்சிட வெளிவந்தகவிஞர், ''ஹோட்டலுக்குப் போய்ப் பேசலாமே!'' என்று என்னை அழைத்துக் கொண்டு 'கவிதா' ஹோட்டலுக்கு வந்தார். சந்தடியற்ற ஒரு தாழ்வாரத்தில் இருவரும் அமர்ந்து கொண்டதும், '' இந்த விளக்கொளி உங்களுக்குப் போதுமா?'' எனக் கேட்டார்.

அவர் நாத்திகம் பேசி வந்த காலத்தில் அரசியலில் பிரபலமாக விளங்கி வந்தாரெனினும், அதனைத் தமது வாழ்க்கையின் இருண்ட காலமாகவே இன்று கருதுகிறார் அல்லவா? அந்த இருண்ட காலத்தைப் பற்றிச் சிந்திக்க ஹோட்டல் தாழ்வாரத்தில் எரிந்த மின் விளக்கின் மங்கலான ஒளி மிகவும் பொருத்தமாகவே தோன்றியது.

''நீங்கள் எப்போது நாத்திகம் பேசத் தொடங்கினீர்கள், அதற்கான சூழ்நிலை எவ்வாறு ஏற்பட்டது என்பதை விளக்கிவிட்டு மீண்டும் நீங்கள் ஆத்திகராக மாறியதைக் கூறுங்கள்!'' என்றேன்.

## மனம் திருந்தினேன்

கவிஞர் கூறினார்: ''நான் சிறு வயதிலே ஆஸ்திகனாகத்தான் இருந்தேன். நெற்றியில் விபூதி பூசிக் கொள்ளும் பழக்கம் 1948 வரை இருந்தது. கலைஞர் கருணாநிதியுடன் பழக்கம் ஏற்பட்டபிறகே நான் மாறினேன். ஆஸ்திகம் மக்களிடையே மறைந்து வருவது போலவும் மக்களின் ஆஸ்திக உணர்வு குன்றி வருவது போலவும் எனக்குத் தோன்றலாயிற்று. அக் கருத்து ஒரு மாயத் தோற்றமே!

''1954வரை, சாமியைக் கேலி பண்ணுவது ஏதோ ஒரு புதுமைப் புரட்சியாக எனக்குத் தோன்றியது. கூட்டம் அக்கருத்துக்களை வரவேற்றது. கூட்டத்துக்கு ஏற்ப அறிவின் பெயரால் நானே என்னை மாற்றிக்கொண்டேன். 'மதுரை மீனாட்சி, உனக்கு வைர மூக்குத்தி ஏன்?', 'பழநி முருகனுக்குப் பாலபிஷேகம் ஏன்?' என்றெல்லாம் சாமியை ஏசிப் பேசி வந்த காலத்திலும் என் இதயத்தில் ஆஸ்திகமே குடிகொண்டிருந்தது. சகுனம் பார்ப்பது, சோதிடம் இவற்றைக் கேலி செய்தும் கூட்டங்களில் பேசி வந்தேன்.

''1955 முதல் நான் மாறத் தொடங்கினேன். 'இறைவா!' என்று தொடங்கும் கட்டுரைகளை எழுத ஆரம்பித்ததும் அண்ணாவே என்னை அழைத்துக் கேட்டார். 'ஒரு கடவுள் என்ற கொள்கையை நாம் ஒப்புக்கொள்கிறோம். ஆக, இரண்டு மூன்று, என்று பல கடவுளரை ஏற்றால் என்ன? அதனால் குற்றமில்லை' என்று என் கருத்தினை விளக்கினேன். இறை நம்பிக்கை அடிப்படையிலான கட்டுரையை 1956ல் எழுதினேன். நாத்திகம் நிலையான தத்துவம் அல்ல; அது போலித்தனமான நம்பிக்கையை மக்களிடையே தோற்றுவிக்கிறது என்பதை உணர்ந்தேன். நாத்திக உணர்வு பனி மூட்டம் போல் மறைந்தது.

''குமாரபாளையத்தில் 1956ல் நிகழ்ந்த தி. மு. க. பொதுக் குழுவில், எனது கடவுள் நம்பிக்கை எழுத்துக்காக என்மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வரப்பட்டது. வாழ்க்கையில் அதிர்ச்சி, மீட்சி இரண்டுக்குமே கடவுள்தான் காரணம் என்ற நம்பிக்கை என்னுள் பிறந்தது. 'நாத்திகம்' நாமே கற்பித்துக் கொண்டதுதானே என்று நான் உணர்ந்தவுடன், அது வந்த வேகத்திலேயே மறைந்து போயிற்று. நாத்திகத்துக்கு



உடன்பட்ட வாழ்க்கை எனக்கு என்றுமே இருந்ததில்லை'' என்று சரமாரியாகக் கூறினர் கவிஞர். வெளியே மழையும் சரமாரியாகப் பொழிந்து கொண்டிருந்தது.

''கழகக் கூட்டங்களில் மட்டுமே உங்களுடைய நாத்திக வாதத்துக்கு ஆதரவு இருந்திருக்கும் என நினைக்கிறேன். சரிதானு?''

''சரியே! கழகத்துக்கு வெளியே எனது நாத்திக வாதத்துக்கு ஆதரவு இருக்கவில்லை. 1949 முதல் '55 வரை நிகழ்ந்த பல கூட்டங்களில் நான் நாத்திகம் மிகுதியாகப் பேசி வந்தேன். ஆனல் அதிகம் எழுதவில்லை. எனது நாத்திக வாதங்கள் அச்சில் அதிகமாய் ஏறுதது ஒரளவு திருப்தி தருகிறது.''

''நீங்கள் நாத்திகம் பேசி வந்தபொழுது நிகழ்ந்த சுவையான சம்பவம் ஏதாவது கூற முடியுமா?''

''நான் நாத்திகனுக இருக்கையில் 1950ல் ஆத்திக முறையில் எனது திருமணம் நிகழ்ந்தது. திரு கருணாநிதி முதலியோர் திருமணத்துக்கு வந்திருந்தனர். வைதிக முறைப்படிதான் எனது திருமணம் நடந்தேறியது. செட்டிமார்கள் பலர் கேலி செய்ததும் எனக்கு நினைவில் உள்ளது'' என்று சிரித்தவாறு கூறினுர் திரு கண்ணதாசன்.

அவர் தொடர்ந்து கூறினுர்: ''1956ல் ஆச்சாள்புரம் கிராமத்தில் (தஞ்சை மாவட்டம்) ஒரு கிராமவாசி — முன்பின் நான் பார்த்தறியாதவர் என்னைச் சந்தித்தார். வீட்டில் ஒரு குத்துவிளக்கினை ஏற்றி வைத்து அவ்விளக்கினைப் பார்த்தார். பிறகு என்னை உற்றுப் பார்த்தார். மறுபடியும் விளக்கைப் பார்த்துவிட்டுப் பாடத் தொடங்கினுர். என் வாழ்க்கையில் நிகழ்ந்த சம்பவங்களை யெல்லாம் அவர் குறிப்பிட்டார். பெரும்பாலான நிகழ்ச்சிகள் சரியாகவே இருந்தன.

''பின்னர் ஒரு சந்தர்ப்பத்தில் சேலத்தில் டாக்டர் கெரிசன் என்பவரைச் சந்திக்க நேர்ந்தது. 'வருங்காலத்தில் நீங்கள் லட்சக் கணக்கில் சம்பாதிக்கப் போகிறீர்கள்; லட்சக் கணக்கில் செலவழிக்கவும் செய்வீர்கள். நீங்கள் தனிமையை நாடுவீர்கள்!' என்று அவர் சோதிடம் சொன்னுர். அப்போது நான் மாடர்ன் தியேட்டர்ஸில் மாதம் ரூ. 120 சம்பாதித்துக் கொண்டிருந்தேன். அன்றையச் சூழ்நிலையில் அவர் கூறியதை நம்ப முடியாது தான். எனினும் அது எவ்வளவு உண்மையாகி விட்டது!''

''உங்களை ஆத்திகத்துக்குத் திருப்ப இந்த நிகழ்ச்சிகளும் உதவியுள்ளன. அப்படித் தானே?''

''ஆமாம். வரும் ஜூனுக்கு எனக்கு 47 வயது முடிகிறது. அவர் கூறியது அப்படியே பலித்து வருகிறது. எந்த சோதிடங்களை நான் முன்னர் கேலி செய்து கூட்டங்களில் பேசினேனே அவற்றில் நம்பிக்கை ஏற்படுகிறது. 'பாவம் செய்தவர்கள் தண்டிக்கப் படுவார்கள்' என்று நம் மதம் வலியுறுத்துவதில் எனக்குப் பூரண நம்பிக்கை ஏற்பட்டு வருகிறது. என்னை மனதார ஏமாற்றியவர்கள், வஞ்சித்தவர்கள் இன்று மிகவும் கஷ்டப்படுகிறார்கள் என்பதையும் கண்கூடாகக் காண்கிறேன்!'' என்று பச்சாதாபம் நிறைந்த குரலில் கூறுகிறார் கவிஞர்.

''பக்திச் சுவை ததும்ப நீங்கள் எழுதிய பாடல்களுள் நீங்களே சிறப்பாகக் கருதும் பாடல்கள் இரண்டினைக் குறிப்பிடுங்களேன்.''

''திருவிளையாடல் படத்துக்கு எழுதிய 'ஒன்ருனவன், உருவில் இரண்டானவன்', வானம்பாடி என்னும் படத்துக்கு எழுதிய 'கங்கைக் கரைத் தோட்டம்' என்ற கண்ணன் மீதான பாடல் ஆகிய இரண்டினையும் சொல்லுவேன்'' என்று பளிச்சென்று பதிலளித்தார் கவிஞர் கண்ணதாசன். பேட்டி: 'பாணன்'

# நவ யுக மிர்ராபோ ராணி

நீங்களும் மிர்ராபோ ராணியாகத் திகழ வேண்டுமா? உங்களுக்காகவே மிர்ராபோ :.புல் வாயில் புடவைகள். 2 120 x 2/120. வாஷ் அன் வேர்.

இதர தயாரிப்புகள் :

ஸ்டேலாங்கர்,
ஸ்ட்ரேஞ்சர் ஷர்ட்டிங்குகள்,
எலகன்ஸா சூட்டிங், லவ்லின் ஷர்ட்டிங்,
சில்வர்லைன், சில்வர்கிங் வேஷ்டிகள்,
மல், காடா.

## தி கோயம்பத்தூர் காட்டன் மில்ஸ் லிமிடெட்

மார்க்கெட் செய்பவர்கள் :
வெங்கடேஷ் வஸ்திராலயா

# மிர்ராபோ

:.புல் வாயில் புடவைகள்

இள நங்கைப் பருவம்,
முழுமை உருவம்
...பெற்றுத் திகழ மிர்ராபோ




ADWAVE-CCM-123 A

# வளரும் குழந்தைகளுக்கு வாய்ப்பான துணை இன்க்ரிமின்*!

துள்ளித் திரியும் கன்றுப் பருவம்..ததும்பி வழியும் சக்தி...பொங்கிப் பெருகும் பூரிப்பான ஆரோக்கியம்!

இதுதான் வளரும் பருவம். உடலும் உள்ளமும் ஓங்கி வளரும் இச் சமயத்தில் உங்கள் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் வழங்கி வாருங்கள். பலனளிக்கும் வைட்டமின்கள், இரும்புச் சத்து, அதி முக்கிய அமினொ அமிலம், வளரும் பருவத்தில் அத்தியாவசியமான இவை அனைத்தும் அடங்கியது இன்க்ரிமின் டானிக்.




## இன்க்ரிமின்*

**இன்க்ரிமின் டானிக் வளரும் பருவத்தினருக்கு ஒரு வரப்பிரசாதம்**

வளரும் பருவம்!

டாக்டர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர் Lederle சயனமைட் இந்தியா லிமிடெட்டின் ஒரு பிரிவு

*அமெரிக்கன் சயனமைட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்

SISTAS-INC-3058A TAM

# ராஜாஜியின் ஜெயில் டைரி

முஸ்லிம்கள் பிரார்த்தனை சமயத்தில் தரிக்கும் உடையைக் குறித்துச் சிறைத் தலைமை அதிகாரி என்னிடம் கூறிய உறுதிமொழியை நிறைவேற்றவில்லை. அதைப் பற்றி அப்துல்வஹாப் என்னிடம் கூறி அதிகமாக வருத்தப்பட்டார். முழங்காலுக்குக் கீழே நான்கு அங்குலம் நீளமாக உள்ள கால் சட்டை வேண்டுமென்று அவர்கள் கேட்கிறார்கள். சிறையில் தரப்படும் காற்சட்டைகள் முழங்கால் வரையில் கூட வருவதில்லை. கடுங்காவல் தண்டனை பெற்றவர்களுடைய சொந்தக் காற்சட்டை, லுங்கி முதலிய உடைகளைச் சிறைக்கு வந்த அன்று சிறை அதிகாரிகள் வாங்கி வைத்துக் கொள்கிறார்கள். அந்த உடைகளில் ஒரு காற் சட்டையோ அல்லது ஓர் அங்கியோ கொடுத்தால் போதும். அவர்கள் பிரார்த்தனை சமயம் உபயோகித்துக் கொள்வார்கள். அவர்கள் கேட்பதெல்லாம் இவ்வளவுதான். இதைக்கூட அனுமதியாதிருந்தால் — சிறை அதிகாரிகள் கைதிகளுடைய மத விஷயங்களில் தலையிடுவதில்லை என்று கூற முடியுமா ?

வெறுங் காவல் தண்டனை பெற்ற கைதிகளைத் தினந்தோறும் குளிக்கச் சம்மதிப்பது போலவே கடுங்காவல் கைதிகளையும் குளிக்கச் சம்மதிப்பதாகவும் சிறைத் தலைமை அதிகாரி எனக்கு உறுதிமொழி தந்தார். ஆனால் அதன் பிறகு வாரத்தில் மூன்றுநாட்கள் தான் குளிக்கலாம் என்று கூறினார். தண்ணீர் இறைப்பது கஷ்டம் என்று சாக்கு போக்குக் கூறினார்கள். ஆனால் நாங்களே இறைத்துக் கொள்கிறோம் என்று கைதிகள் கூறினார்கள். இன்று மறுபடியும் அதிகாரியிடம் விண்ணப்பித்துக் கொண்டார்கள். ஆனால் யாதொரு பயனும் உண்டாகவில்லை.

இப்பொழுது சிறை நிர்வாகத்தின் மாகாண அதிகாரி ஓர் இந்தியர். அவர் உண்மையிலேயே அரசியல் கைதிகளை நாகரிகமான முறையில் நடத்த விரும்புவாரானால் சட்டங்களையும், விதிகளையும், உபவிதிகளையும் புரட்டிப் பார்த்துக் கொண்டிருப்பதில் பயனில்லை. கௌரவமான மக்களைச் சிறையில் எப்படி நடத்த வேண்டும் என்பது சாதாரணமான சிறை உத்தியோகஸ்தர்களுக்குத் தெரியாது. அவர்களுடைய அனுபவமெல்லாம் குற்றவாளிகளான கைதிகளிடையேதான். அவர்களை நடத்தும் விதம்தான் அவர்களுக்குத் தெரியும். எனவே புதிதாக விதிகள் ஏற்படுத்துவதால் விசேஷமான பலன் ஒன்றும் உண்டாகமாட்டாது. இந்தியரான மாகாண அதிகாரி உண்மையாகவே நன்மை செய்ய விரும்புவதாயிருந்தால் அவர் செய்ய வேண்டியதெல்லாம் அரசியல் கைதிகள் அனைவரையும் தனியாக ஒரு சிறையில் வைத்துப் பொறுக்கி எடுத்த உத்தியோகஸ்தர்களை நியமிப்பது ஒன்றுதான். அரசியல் கைதிகள் விஷயத்தில் சிறை விதிகளைக் கருணையுடன் அமுல் நடத்த வேண்டியிருக்கும். அந்த ஒன்றுதான் இப்பொழுதுள்ள சிறை அதிகாரிகளுக்குக் கொஞ்சமும் பிடிக்காததாகும். இப்பொழுதுள்ள சிறைத் தலைமை அதிகாரிகளையும், ஜெய்லர்களையும் சீர்திருத்தலாம் என்று எண்ணுவது நடக்க முடியாத காரியம்.

ஆயினும் மக்கட் பண்புடன் நாகரிகமாக நடக்கக்கூடிய உத்தியோகஸ்தர்கள் சிலரையேனும் கண்டுபிடிப்பது மிக எளிதான காரியமேயாகும். "அநேக" கைதிகள் விஷயத்தில் அநாகரிகமாக நடந்து கொள்வார்கள் சிறை அதிகாரிகள் என்பதை இந்திய அரசாங்கத்தின் பிரதிநிதியான ஸர் வில்லியம் வின்ஸெண்ட் தலையைச் சுற்றி மூக்கைத் தொடும் மாதிரியில் ஒப்புக் கொண்டிருக்கிறார்.



# உடல் நலம் துள்ளும் இரட்டைக் குழந்தைகள்

**நாங்கள் பிறந்தபோது எங்கள் எடை 1.7 கிலோதான் என்பதை நம்புவீர்களா ?**

**இதோ பாருங்கள், அமுல்ஸ்ப்ரே புரிந்துள்ள அற்புதத்தை... 8 மாதங்களில் 11 கிலோகிராம் !**

அவினாஷ் நாள் பூராவும் வீடு முழுவதும் தவழ்ந்து வருகிறான். அனுராக் கூட அவனுக்கு சளைப்பதில்லை.

இந்த இரட்டைக் குழந்தைகளுக்குப் பொதுவான அம்சம்: அமுல்ஸ்ப்ரே மற்றும் துள்ளிவரும் தூய ஆரோக்கியம். உங்கள் குழந்தைக்கும் பிறந்த முதல் வாரத்திலிருந்தே அமுல்ஸ்ப்ரே தரத் தொடங்குங்கள். அமுல்ஸ்ப்ரே எளிதில் ஜீரணிக்கக்கூடியது; சரிவிகித ஊட்டச் சத்துக்கள் நிறைந்தது. அவசியமான வைட்டமின்கள், தாதுப் பொருள்கள் மற்றும் சீரான வளர்ச்சிக்காக அதிக அளவிலே தரமுயர்ந்த புரதச் சத்துக்கள் கொண்டது. இந்தியாவிலேயே உச்ச விற்பனையுள்ள குழந்தை உணவாக விளங்குவதிலிருந்தே அமுல்ஸ்ப்ரே தாய்மார்கள் மற்றும் டாக்டர்களின் நம்பிக்கையைப் பெற்றிருப்பது பளிச்சிடுகிறது.




# அமுல்ஸ்ப்ரே

தாய்ப்பாலுக்குப் பதிலாகப் புகட்டச் சிறந்தது



கைரா டிஸ்ட்ரிக்ட் கோ-ஆப்பரேடிவ் மில்க் ப்ரொட்யூஸர்ஸ் யூனியன் லிட்., ஆனந்த், குஜராத்.

ASP-AS-28

# நவரஸம்

கோல்டன் ஸ்டேஜ் நாடகக் குழுவினர் நடிக்கும் "நவரஸம்" என்ற நாடகம் தலைப்புக் கேற்ப நவரஸங்களையும் கொண்டதாயிருக்கிறது—அவலச் சுவையையும் சேர்த்துத்தான்!

இந்த நாடகத்துக்கு ஏற்ற கதையைத் தேடி இக்குழுவினர் அலையவில்லை. நாடக உலகில் உள்ள சங்கடங்களையே கருப்பொருளாக்கி நாடகத்தை மிகவும் சுலபமாக உருவாக்கி விட்டனர்.

"தெய்வத் தமிழ்" என்ற நாடகத்தில் அவ்வையார் வாழ்க்கையில் சில காட்சிகள் வரப்போவதாக ஒலிபெருக்கியின் மூலம் அறிவித்ததும் எனக்கு ஒரு கவலை ஏற்பட்டது - அவ்வையாராக யார் நடிக்கப் போகிறார்கள் என்று. மறைந்த நாடகக் கலைஞர் அவ்வை டி. கே. சண்முகத்தை மேடையில் அவ்வையாராகப் பார்த்த பிறகு வேறு யாராலும் அவ்வளவு பொருத்தமாக அந்தப் பாத்திரத்தை ஏற்று நடிக்க முடியும் என்று என்னால் நம்ப முடியவில்லை.

ஆனால் மேடையில் அவ்வையாரைப் பார்த்ததும் என் கவலை மறைந்து விட்டது. நடிகர் வலம்புரி நாகராஜன் அவ்வையாராக வந்து சொந்தக் குரலிலும் இனிமையாகப் பாடினார். பாத்திரத்துக்கு ஏற்ற முதுமையின் நடுக்கம் கலந்த குரலில் பேசினார்; நன்றாகவும் நடித்தார். இந்த நடிப்புக்காக இவர் அவ்வை சண்முகத்திடமே ஆசி பெற்றிருப்பதை அறிந்து மகிழ்ந்தேன்.

அங்கவை, சங்கவை, வள்ளல் பாரி, பழையனூர் காரி, சேரமான் ஆகியவர்களை மேடையில் காணும் போது மன நிறைவைத் தந்தது. இவர்களை யெல்லாம் அவ்வைப் பாட்டியார் தம் வாழ்க்கையில் சந்தித்தது பற்றிய சுவையான சம்பவங்களை நாடகத்தின் பின்னணிக் காட்சியாகக் காட்டியிருந்த உத்தி பாராட்டும்படி யிருந்தது.

கதை, வசனம், டைரக்ஷன் ஆகிய மூன்று பெரிய பொறுப்புக்களை ஏற்றுத் திறத்துடன் சமாளித்திருக்கும் பி. எம். வி. ரமணன் பி.ஏ. பாராட்டுக்குரியவர். இவற்றுடன் நின்று விடாமல் நாடகக் கம்பெனி முதலாளி நம்மாழ்வார் நாயுடுவாகவும் வேடம் புனைந்து மிகவும் இயல்பாகப் பேசி நடித்திருக்கிறார். அலட்டிக் கொள்ளாமல், பாத்திரத்துக்குப் பொருத்தமாகப் பேசி நடித்த அவர் நம் பாராட்டைப் பெறுகிறார்.

நாடகக் குழுவினருக்கு நேரும் சிரமங்களை ரசிகர்களுக்கு அலுப்பு ஏற்படாத வகையில் தொகுத்திருப்பது திறமையான உத்திதான். பெண் நடிகையைச் சுற்றி வரும் மைனர் சிங்காரம், ஒரு சுவையான பாத்திரம். அவர் வரும் காட்சிகளெல்லாம் கொட்டகையில் நல்ல கலகலப்பு ஏற்பட்டது.

மைனர் சிங்காரமாக நடித்த 'டிகர்' கன்னையா ஒரு நல்ல நடிகர் என்ற பெயரை இந்நாடகத்தின் மூலம் பெற்று விட்டார்: அலட்சியமான பார்வை, திமிரான நடை, ஆடம்பர உடை யாவும் அவர் நடிப்புக்குப் பெரிதும் உதவின.

நாடக ஹீரோ ரவி குமாருக்கு நல்ல தோற்றம் இருப்பது போலவே நன்றாய் நடிக்கவும் வருவது பாராட்டுக்குரியது. நாடக டைரக்டர் திலகம் நாராயணசாமியின் பண்பட்ட நடிப்பு நாடகத்துக்குப் பொருத்தமா யிருந்தது.

வெறும் ஆண்மணிகளை மட்டும் வைத்து நாடகம் நடத்தினால் உருப்படாதுபோலத்தான்! ஆகவே இந்நாடகத்தில் இரு பெண் பாத்திரங்கள் மேனகா, கோதை என்று வருகின்றனர். அவற்றை ஏற்ற ஆர். வாணி, எஸ். ஆர். விஜயா இருவரும் ஆண்மணிகளுக்கிடையில் உற்சாகமூட்டும் பெண் மணிகளாக வந்து போகின்றனர். ஊடல், பூசல், காதல், மோதல் (நல்லவேளையாகச் சாதல் இல்லை!) எல்லாம் வருவதால் நாடகத்துக்குப் பல்சுவையும் கிடைக்கின்றன.

இந்நாடகம் பல சபாக்களில் பன்னிரண்டு தடவை நடத்திருப்பதே இதற்குப் பெருமைதான். ஆயினும் இக்குழுவினர் முயன்றால் இன்னும் நல்ல நாடகம் நடத்த முடியும்.

நாடகக் கதை என்று தனியாக ஒரு சப்ஜெக்ட்டை எடுத்துக் கொள்ளாததால் "தெய்வத் தமிழ்" நாடகக் காட்சிகள் முடிந்ததும் நாடகமே முடிந்து விட்டது போல் தோன்றுகிறதே! அடிக்கடி ஒத்திகைக் காட்சிகள் வருவதும் 'போர்' அடிக்கிறது. இவற்றை யெல்லாம் சரிசெய்துவிட முடியுமானால் ஒரு நல்ல நாடகம் ரசிகர்களுக்குக் கிடைக்கும்.

— காந்தன்





# அத்தைக்குத் தெரியாதா?

எஸ். லக்ஷ்மி சுப்பிரமணியம்

அத்தை மல்லேசுவரத்தில் ஒரு கான்வென்ட் பள்ளியில் 'டீச்சர்'. எங்களுக்குப் பள்ளிக்கூடத்தில் எங்கள் 'டீச்சரி'ன் கண்டிப்பு; வீட்டில் அத்தையின் உருவில் வந்து நிற்கும் 'டீச்சரி'ன் கண்டிப்பு.

அம்மா மறைந்து போன ஆறு மாதங்களில் அப்பா மறுமணம் செய்து கொண்டு விட்டார். கல்கத்தாவுக்கு மாற்றலாகி விட்டது அவருக்கு. படிப்புக் கெட்டுப் போகும் என்று அத்தை எங்களை அழைத்துக் கொண்டு பெங்களூருக்கு வந்துவிட்டாள்.

அத்தை கல்யாணம் செய்து கொள்ளவில்லை. அவளுக்கு நாங்கள்தான் குழந்தைகள். அப்பா கல்யாணம் செய்துகொண்டு விட்டார். இனிமேல் எங்களுக்கு அப்பாவும் அம்மாவும் இந்த வீட்டில்தான்; அத்தையின் உருவில்.

''சாரு சமர்த்துப் பெண்'' என்று என்னைத் தட்டிக் கொடுப்பாள் அத்தை. ரூபாவுக்கு மூக்கு நுனி சிவக்கும். ''ரூபா அசடு இல்லை. ஆனால் அடங்காத......'' என்று ஆரம்பிப்பாள் அத்தை. அவள் பேச்சை முடிக்குமுன் ரூபா பாய்ந்து அவள் மடியின்மீது ஏறி உட்கார்ந்து, வாயை இறுக மூடிவிடுவாள். அவள் அப்படிப் பிடிவாதம் பிடிப்பதையும் குறும்பு செய்வதையும் அத்தை பொறுத்துக் கொள்வாள். குழந்தையாக இருக்கும்போதே நல்ல அழகு அவள். அதற்கென்று கொஞ்சம் மார்க்கு போட்டுப் பொறுத்துக் கொண்டு போய் விடுவாள் அத்தை; டீச்சர் ஆயிற்றே?

பெங்களூரில் எங்கள் வீடு ஒரு 'விக்டோரியன் வில்லா'. தழைந்து இறங்கும் மங்களூர் ஓட்டுக் கூரை. உள்ளே தட்டு ஓடுகள் போட்டு வெள்ளை அடித்திருக்கும். வாசல் வராந்தாவை நீளமாக மரப் பலகைகள் அடைத்து நிற்கும். படுக்கை அறையில் கண்ணாடி ஜன்னல்கள். அங்கிருந்து பார்த்தால் தோட்டத்துப் பூக்கள் சிரிப்பது தெரியும். மழைச் சாரலில் புல் தரைகள் கரைந்து வழிந்து அழிவது போலத் தோன்றும்.

அந்தி வேளைகளில் கட்டிலில் உட்கார்ந்து கொண்டு ஜன்னல் வழியே பனி மூட்டம் இறங்குவதைப் பார்க்கும்போது, எங்களுக்கு உலகமே இன்ப மயமாகத் தோன்றும். சுவர்க் கோழியின் இசை தெளிவாகக் கேட்கும் அமைதியில், அத்தை எங்களுடன் உட்கார்ந்து புத்தகத்தைப் படித்துக் கதைகள் சொல்லுவாள்; கேட்டுக் கொண்டிருப்போம்.

அத்தைக்கு நாற்பது வயது இருக்கும் அப்போது. ஆனால் உடற்கட்டிலும், சுறுசுறுப்பிலும் ஓர் இளமை 'விண்'ணென்று தெறித்து நின்றது. அத்தை ஏன் கல்யாணம் செய்து கொள்ளவில்லை? அவள் வாழ்க்கையில் இளமையில் என்ன நேர்ந்தது அப்படி ? அப்பாவால் அம்மா மறைந்து போன பிறகு தனியாக இருக்க முடியவில்லை. அத்தைக்கு மட்டும் எத்தனை வைராக்கியம் ?

வேகமாகச் சாப்பிட்டுப் பள்ளிக்கூடம் போய், வேகமாக விளையாடித் தூங்கியது போல, அந்தக் குழந்தைப் பருவத்து நாட்களும் வேகமாகக் கழிந்து போய்விட்டன. நான் கல்லூரிப் படிப்பை முடித்துவிட்டேன். ஷோபா பி.எஸ்ஸி. படிப்பில் இரண்டாவது ஆண்டுப் படிப்பில் இருந்தாள். அத்தை 'ரிடையர்' ஆகிவிட்டாள்.

என்னைக் கல்லூரியிலேயே வேலைக்குக் கூப்பிட்டார்கள். அத்தை ஒப்புக் கொள்ளவில்லை. ''கல்யாணம் ஆவதற்குமுன் இரண்டு வருஷங்கள் குடும்பப் பொறுப்பைப் பார்த்துக் கொள்ள வேண்டும். சமையலறை நுட்பங்களைக் கற்றுக் கொள்ள வேண்டும்'' என்று சொல்லிவிட்டாள். கற்றுக் கொள்வதில் எனக்கு ஆட்சேபணை இல்லை. ஆனால் கல்யாணம்? அதற்கு என்ன அவசரம் ?

ஷோபா நன்றாக வளர்ந்து விட்டாள். நடந்தால் தென்றலில் செடி அசைவது போல் இருக்கும். அவள் இன்னும் விளையாட்டுப் பெண்தானா? யௌவனத்தின் ஆசைகள் இன்னும் அந்த உள்ளத்தில் குறுகுறுக்கவில்லையா ?

அன்று மாலை ஷோபா கல்லூரியிலிருந்து திரும்பி வந்தபோது நான் சாப்பிடும் மேஜையைத் துடைத்துக் கொண்டிருந்தேன். வேலை மும்முரத்தில், மாலை நேரமாகியும் இன்னும்





முகம் கழுவி நெற்றிக்கு வைத்துக் கொள்ளக் கூடப் பொழுது கிடைக்கவில்லை.

என்னைப் பார்த்ததும் ஷோபா சட்டென்று நின்றாள். ஓடி வந்த வேகத்தில் அவள் மார்பு இலேசாக மிதந்தது. உதட்டிலிருந்து ஒரு சின்னச் சிரிப்பு தெறித்தது. தம்ளரை எடுத்து அவளுக்குக் காப்பியை ஊற்றி வைத்துவிட்டு நாற்காலியில் உட்கார்ந்தேன். ஷோபா பக்கத்திலேயே உட்கார்ந்து கொண்டாள். நிதானமாக அவள் என்னை நிமிர்ந்து பார்த்தாள்.

''என்ன சமாசாரம் ஷோபா ?''

''அவரைப் பற்றி நான் உனக்குச் சொல்லலாமா ?''

''யார் அது 'அவர்' ?''

'' என்னுடைய 'கெமிஸ்டிரி' லெக்சரர் ராஜேஷ்.'' அவள் கன்னத்தில் ரோஜாச் சிவப்பு. என் சந்தேகத்துக்கு ஆதாரம் இல்லாமல் போகவில்லை.

'' என்ன ஷோபா?'' என் குரலுக்கு எதிரொலியாக அவள் முகம் நிமிர்ந்தது. ஆனால் அவள் பார்வையில் என் கண்டிப்புக்குப் பணியும் இசைவைக் காணோம்.

"ஆமாம். இன்றைக்கு என்னிடம் அவரே சொன்னார். கொஞ்ச நாட்களாகவே எங்களுக்கு நடுவில் இந்தத் தயக்கம். இன்றைக்கு லைப்ரரியில் ஷெல்பின் ஒரு புறம் நின்று நான் ஒரு புத்தகத்தை எடுத்துக் கொண்டிருந்தேன். மறுபுறமிருந்து அவரும் அதே புத்தகத்தை எடுத்துக் கொண்டிருந்தார். புத்தகம் கீழே விழுந்து விட்டது. நாங்கள் ஒருவர் விரல்களை மற்றவர் கெட்டியாகப் பிடித்துக் கொண்டோம்!"

சோழிகள் குலுங்கியதுபோல் அவள் சிரிப்பு. எனக்குச் சிரிக்கத் தோன்றவில்லை. அத்தையின் கண்டிப்பில் எங்கள் வீட்டுப் பக்கம் வாலிபர்கள் யாரும் வரத் துணிந்ததில்லை. வாழ்க்கையில் இதைப் போன்ற ஓர் அநுபவத்தை நான் நினைத்துப் பார்த்தது கூட இல்லை. ஷீபா என்னை முந்திக்கொண்டு விட்டாள்.

"என்ன யோசனை அக்கா?"

நான் என்னைப் பற்றியே யோசித்துக் கொண்டிருக்கிறேன். அவளுடைய சிந்தனை வேறு எங்கேயோ இருந்தது.

"நீ இன்னும் சின்னப் பெண்தான் ஷீபா."

"இல்லை, சாரு! எனக்கு மார்ச்சு மாதம் வந்தால் பத்தொன்பது வயது ஆரம்பிக்கப் போகிறது."

"இன்னும் பதினெட்டு வயது முடியவில்லை உனக்கு....."

"ஜூலியட்டுக்கு என்ன வயது அப்போது? பதினைந்து. அப்புறம் மிராண்டா...."

"நாம் ஷேக்ஸ்பியர் காலத்தில் இருக்கவில்லை ஷீபா. உனக்கு முன்னால் நான் இருக்கிறேன். நான் இன்னும் என் வயதைப் பற்றி எண்ணிப் பார்த்ததில்லை. எந்த உரிமையையும் கேட்டதில்லை."

"ஓ! சாரு. நான் அப்படி நினைத்துப் பார்க்கவில்லை. உன்னை மீறி எதையும் நான் செய்ய நினைக்கவில்லை. செய்ய மாட்டேன். பிராமிஸ்!" அவள் குரல் சட்டென்று கலங்கிற்று. என் மனத்தில் ஒரு பச்சாத்தாபம் தலைதூக்கிற்று.

"அப்படிச் சொல்லவில்லை ஷீபா. அத்தை இப்படித்தான் உன்னைக் கேட்பாள். அதைத்தான் நானும் கேட்டேன். இப்போது என்ன? யோசிக்கலாம். விடு."

பக்கத்து அறையிலிருந்து அத்தை நாங்கள் என்ன பேசுகிறோம் என்று விசாரிப்பது போல் கூப்பிடும் குரல் கேட்டது. "ஒன்றும் இல்லை, அத்தை!" ஒரே சமயத்தில் ஒரே பதிலில், இரு குரல்களும் இரு ஸ்தாயியில் ஒலித்தன.

"ஒன்றும் இல்லாமல் என்ன பேச்சு இவ்வளவு நேரம்?"

பதில் சொல்லாமல் ஆளுக்கு ஒரு பக்கம் பிரிந்து போனோம். "உஷ். இதைப் பற்றி அப்புறம், தூங்குகிறபோது பேசலாம்" என்று ஷீபாவை இரகசியக் குரலில் எச்சரித்தேன்.

காலை ஒன்பது மணி. ஷீபா கண்ணாடியின் முன்னால் நின்று முகத்தைத் திருப்பி, முதுகைப் பார்த்துச் சரி செய்து கொண்டிருந்தாள். இப்போது அவள் தன் நினைப்பில் இல்லை. அந்த 'லெக்சரரை'ச் சந்திக்கும் ஆனந்தத்தில் தன்னைத் தயார் செய்து கொண்டிருக்கிறாள்.

"ஷீபா! சாப்பிட வா. காலேஜுக்கு நேரமாயிற்று."

என் குரல் மட்டும் அல்ல; பார்வையும் அவளைத் தட்டி எழுப்பி இருக்க வேண்டும். அவள் புரிந்து கொண்டாள். மளமளவென்று புத்தகங்களை எடுத்து அடுக்கிக்கொண்டு சாப்பிட உட்கார்ந்தாள். அவள் கைவிரல்கள் தட்டைத் துழாவின. நெஞ்சு ஏதோ நினைவுகளில் அமிழ்ந்து கொண்டிருந்தது.

ஷீபா கிளம்பிப் போய்விட்டாள். அவள் பேச்சும், பார்வையும், செய்கைகளும் என்னுள் எதிரொலி எழுப்பிக் கொண்டிருந்தன. அது எனக்குப் புது அநுபவம். நான் அறிந்திராத ஒன்றை அவள் மூலம் நான் இப்போது உணர்ந்து கொண்டிருந்தேன்.

சாப்பிட்டுவிட்டு நாங்கள் வந்து முன் ஹாலில் உட்கார்ந்தோம். வேடிக்கையாக இருந்தது; அன்று ஏனோ அத்தை என் கல்யாணத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்தாள்.

"நீ நல்ல பெண் சாரு. உனக்கு எத்தனையோ பொறுப்புக்கள். ஆனால் எத்தனை அடக்கமாக, சிரித்த முகமாக, தைத்த முள்ளை எடுப்பது போல் மென்மையாக ஒவ்வொரு காரியத்தையும் கவனித்துக் கொள்கிறாய்? என் கண்ணே படாமல் இருக்க வேண்டும்."

"என்ன அத்தை இது? திடீரென்று இப்படியெல்லாம் பேசுகிறீர்கள்?"

"ஒரு நாள் நீ கெட்டிக்கார மனைவியாக, குடும்பத்துக்கு அழகாக இருக்கத்தானே வேண்டும்? எத்தனை நாட்களுக்கு இப்படியே இருக்க முடியும்?"

"அதற்கு என்ன அவசரம் அத்தை?"

"நீ அவசரப்படாமல் இருக்கலாம், சாரு. உலகம் அவசரப்படாமல் இருக்குமா?"

அவள் சிரிப்பும் பேச்சும் இருட்டாழமாகத் தெரிந்தன. அதில் துழாவி அடையாளம் காண எனக்குத் துணிவில்லை.

"நீங்கள் நினைக்கிறதுபோல் என் மனத்தில் எதுவும் இல்லை அத்தை!"

"உண்மைதான். உனக்கு நான் எங்கே சந்தர்ப்பம் கொடுத்தேன்? ஷீபாவாவது தனியாகக் கல்லூரிக்குப் போகிறாள். ஏதாவது ஒரு வாய்ப்பு நேரலாம் —"

"ஷீபாவா? அவள் குழந்தை அத்தை!"

அத்தை பெருமூச்சு விட்டுக் கொண்டாள். "எல்லாப் பெண்களுமே குழந்தைகள்தாம் சாரு. குழந்தை மனசு எப்போது மாறுகிறது என்று அவள் அம்மாவுக்குக்கூடத் தெரியாது. நான் அத்தைதானே?"

அத்தைக்கு ஏதாவது தெரியுமா? அல்லது எல்லாமே தெரியுமா? என்ன திட்டங்கள் வளர்ந்து கொண்டிருக்கின்றன, இப்போது அவள் மனத்தில்?

"தெரிந்தவர்கள் உறவினர்கள் எல்லோரிடமும் சொல்லி வைக்கிறேன். பார்க்கலாம். நீங்கள் இரண்டு பேரும் என்னுடைய பொறுப்புகள். உங்கள் அப்பா இதில் பங்கெடுத்துக் கொண்டு எதையும் தீவிரமாகச் செய்யப் போகிறதில்லை." அத்தை எழுந்து போய்விட்டாள். நான் ஒரு புத்தகத்தை

இந்த தீபாவளிக்கு சாரதாஸின
பெருமை மிக்க படைப்புகள்...

அழகு சாம்ராஜ்யத்தின் இளவரசிகளுக்கு

"அனுராக்"

மயிலைப் பழிக்கும்
மங்கையருக்கு

"டிம்பிள் குவீன்"





செல்லும் இடமெல்லாம்
பிரகாசத்தை அளிக்க

சூரிய வன்ஷி

# சாரதாஸ்

32, N.S.B. ரோடு.
திருச்சி-2
போன் : 7077

பட்டுப்புடவைகளுக்கு நம்பிக்கையான பெயர்

தன் பில்டிங் 175 1, மவுண்ட ரோடு, சென்னை-2. போன் : 87177



**தீபாவளி முடிய ஞாயிற்றுக்கிழமைகளிலும் விற்பனை உண்டு**

உங்கள் குடும்பத்தினரின்
உடல்நலம் ஓங்கியிருக்க
அவசியம் அளியுங்கள் மிகச்
சிறந்ததையே

# அவர்களுக்கு விவா கொடுங்கள்.




விவா நூதன உணவு தொழில்நுட்பத்திறமையில் உருவானது. இதில் மற்ற ஆரோக்கிய உணவுப் பானங்களில் உள்ளதைப்போன்று தூய்மையான, முழுமை பெற்ற ஆடைப்பாலும் பார்லி மால்ட்டும் உள்ளன. ஆயினும் விவாவில் மட்டுமே கோதுமை மால்ட் அடங்கியுள்ளது.

கோதுமை மால்ட் எதற்கு?

எதற்கெனில், அதில் வளமைமிக்க கார்போஹைட்ரேட், புரதங்கள், விட்டமின்கள் மற்றும் கனிம சத்துக்கள் எளிதில் சீரணிக்கும் வகையில் சேர்க்கப்பட்டுள்ளன.

கோதுமை மால்ட் கலந்திருப்பதால் விவா அதிக அளவு ஊட்டச்சத்து உள்ளதாய், பூரணமான இன்சுவையோடு, வளமிக்க பொன்னிறம் கொண்டு, உடனடியாகக் கரையும் தன்மையோடு விளங்குகிறது.

ஆகவே, உங்கள் அன்றாட உணவிலுள்ள பற்றுக்குறைகளை ஈடுசெய்ய சரியான, போதுமான ஊட்டச் சத்து அளிக்கவேண்டுமென்றால் அதற்கு விவா போல வேறு எதுவும் சிறந்ததல்ல

மிகச் சிறந்ததையே தேர்ந்தெடுக்க இதோ அரியதொரு வாய்ப்பு.

விவாவையே தேர்ந்தெடுங்கள்.

ASP/JIL-V-IA/73 TAM





இந்தியாவின் தயாரிப்போர்,
ஜேக்தீத் இண்டஸ்ரீஸ் லிட்.

# விவா

உற்சாகமான ஆரோக்கிய வளர்ச்சிக்கு தினமும் விவா.

எடுத்து வைத்துக் கொண்டு, படிக்கும் பாவனையில் யோசிக்க ஆரம்பித்தேன்.

பிற்பகல் நேரம். அத்தை உள்ளே தூங்கிக் கொண்டிருந்தாள். ஷோபா கல்லூரிக்குப் போய்விட்டாள். வாசற் கதவு மணி அடித்தது. கச்சிதமாக உடை அணிந்த ஒரு வாலிபன், தலையை அசைத்து நின்றான், நான் கதவைத் திறந்ததும். எனக்கு 'ஜில்' என்று வியர்த்தது.

''உள்ளே வரலாமா? என்னை வருமாறு சொல்லி அனுப்பினார்கள்.''

என் மனத்தில் விழுந்த சந்தேகம் உறுதியாகிவிட்டது. ''வாருங்கள்'' என்று சொல்லிவிட்டுக் கதவைத் திறந்து பின் வாங்கினேன். என் கண்கள் அவனை இரகசியமாக அளவிட்டன. அந்த வாலிபனுக்கு அவ்வளவு தைரியம்கூட இல்லை. அத்தை எழுந்திருக்க நேரமாகலாம். என்ன செய்வது?

''கொஞ்சம் உட்காருகிறீர்களா ?'' என்று ஹாலில் இருந்த சோபாவை நோக்கிக் கையை நீட்டினேன். அவன் உட்கார்ந்ததும்பத்திரிகைகளை அருகே வைத்துவிட்டுத் திரும்பினேன்.

''நேரமாகுமா?'' என்று கேட்டான்.

எப்படிச் சொல்வது? அத்தை எப்போது எழுந்திருப்பாளோ ? வேறு எதுவும் சொல்வது மரியாதையாகத் தோன்றவில்லை. ''கொஞ்சம் காத்திருக்க முடியுமா?''

''சரி'' என்று திரும்பியவன் ''இதுதானே ரேடியோ?'' என்று கேட்டான். அந்த வாலிபன் அவ்வளவு உரிமையோடு பேசியது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. ''ஆமாம்'' என்று சொல்லிவிட்டு உள்ளே போனேன்.

பதினைந்து நிமிடங்கள் ஆகி இருக்கும். வெளியே வந்தேன். அந்த வாலிபன் ரேடியோவைப் பிரித்துப் போட்டிருந்தான். எனக்கு ஒன்றும் புரியவில்லை.

''அத்தை இன்னும் எழுந்திருக்கவில்லை.''

''மெள்ள எழுந்திருக்கட்டும். எனக்கு அவசரம் இல்லை. ஆனால் அத்தை எழுந்த பிறகுதான் மேலே எதுவும் பேச முடியுமா?''

தைரியத்தை இரண்டு கைகளிலும் பிடித்துக் கொண்டு பதில் சொன்னேன். ''அப்படி எதுவும் இல்லை. நாமே பேசலாம்.''

''சரி. நான் உங்களோடு உள்ளே வரலாமா ?''

என் வாய் உலர்ந்து போயிற்று. நிமிர்ந்து பார்க்கத் துணிவில்லை. அத்தையை எழுப்பலாமா? எனக்காக அவன் காத்திருக்கவில்லை. உள்ளே வந்து ரிஃப்ரிஜிரேட்டரைத் தொட்டபடி நின்றான்.

'' நான் இன்னும் தீர்மானம் செய்யவில்லை, மிஸ்டர்! உங்கள் பெயர் என்ன? அத்தையைக் கேட்டுத்தான் முடிவாக எதுவும் சொல்ல முடியும்.''

''அப்பா அப்படிச் சொல்லி அனுப்பவில்லையே ? போய்ப் பார்த்து விட்டு வரச் சொன்னாரே. இதைச் சரி பார்க்கத்தானே வந்தேன் நான் ? ரேடியோவையும் சரி பார்க்கச் சொன்னார் அப்பா. அதுதான்.''

என்னைச் சுற்றிலும் அந்த அறையில் இருந்த பொருட்கள் யாவும் சுழன்றன. அரை மணி நேரமாக, ஒருவரையொருவர் புரிந்து கொள்ளாமல், என்ன செய்து கொண்டிருக்கிறோம்? காதோரம் வெட்கம் குறுகுறுத்தது. இப்போது அவனை நான் பார்த்த பார்வையில் கேலியும் இல்லை; கோபமும் இல்லை. ரிப்பேர் செய்து கொடுக்க வந்தவர்தானா ?

ரிஃப்ரிஜிரேட்டரைத் திறந்து வைத்தான். அவன் வேலையைக் கவனிக்கும்போது காப்பி போட்டுக் கொண்டு வந்து வைத்தேன். ஒரு மணி நேரம். அவன் வேலை முடிந்துவிட்டது. நான் பக்கத்தில் நின்று கவனித்துக் கொண்டிருந்தேன். சுறுசுறுப்பாக இயங்கும் கைகள். வியர்வை பூத்த நெற்றி. காற்றில் சுருள் சுருளாக அலைந்த தலை மயிர்.

வேலை செய்து கொண்டே அவன் பேசினான். சேகர் — அதுதான் அவன் பெயர் — டில்லியில் படித்தவன். ஓர் எலெக்ட்ரிகல் இஞ்சினியர். எல்லாச் சாதனங்களையும் பழுது பார்க்கத் தெரியும். பெங்களூரில் அவன் தந்தை ஒரு பெரிய கடை வைக்கப் போகிறார். அவன் இப்போது அதில் பயிற்சி பெற்றுக் கொண்டிருக்கிறான். அவன் தந்தை இந்த வீட்டு விலாசத்தைச் சொல்லி அனுப்பியிருக்கிறார். அத்தை அனுப்புமாறு கேட்டிருக்கலாம்.

நான் என்னைப் பற்றிச் சொன்னேன். ''பட்டப் படிப்பை முடித்துவிட்டு வீட்டில் இருக்கிறேன். வேலை சமையல். பொறுப்பு வீட்டு நிர்வாகம். பொழுதுபோக்கு ஆங்கில நாவல் படிப்பது, ரேடியோ கேட்பது. இப்போது ரிப்பேர் செய்வதைப் பார்த்துக் கொண்டிருப்பது —''

'களுக்'கென்று சிரித்தான் அவன்.

''உங்களுக்கு ஆட்சேபணை இல்லை என்றால் எங்கள் கடைக்கு வந்து பிடித்த வேலையைப் பார்க்கலாமே. அத்தை அனுமதி கொடுத்தால் தொடர்ந்து பார்க்கலாம்.....''.

அதுவும் சரிதான். பிடித்திருந்தால் அப்புறம் அத்தையிடம் பிடிவாதம் பிடிக்கலாம்.



### அப்பாவி அப்பாஸ்!

''குவாஜா அஹமத் அப்பாஸ் 6 லட்சம் ரூபாய் செலவு செய்து 'மேரே முன்று' என்ற படத்தை எடுத்தார். 40 லட்சம் வசூலாயிற்று. வரி, மற்ற செலவுகள், விநியோகஸ்தர் கமிஷன் எல்லாம் போக அவருக்குக் கையில் வந்தது 4½ லட்சம் ரூபாய். ஆகவே அப்பாஸ் தம் சொத்துக்களை விற்று 1½ லட்சம் கடனை அடைத்தார். ஆகவே இதில் என்ன படிப்பினை?

'''மேரே முன்று' மாதிரி படம் எடுக்கக் கூடாது. 80 சதவிகிதம் வரியாகப் போகிறது. ஆகவே 70 சதவிகித வட்டி கொடுத்துப் பணம் கடன் வாங்கிப் படம் எடுக்க வேண்டும். கறுப்புப் பணம் கொடுத்து ஹேமமாலினி தர்மேந்திரா, சத்ருகன் சின்ஹா இவர்களைப் போட வேண்டும். லட்சுமிகாந்த் பியாரிலாலை விட்டு இசை அமைக்கச் சொல்ல வேண்டும். ஈஸ்ட்மென் கலரில் படம் எடுக்க வேண்டும். இரண்டு காபரே நடனங்கள், மூன்று கற்பழிப்புக் காட்சிகள் வேண்டும். இப்படி எல்லாம் செய்தால் கொஞ்சம் லாபம் கிடைக்கலாம்.''

—திலீப் குமார் நிருபர்களிடம் சொன்னது.

ஆதாரம்: டெக்கான் ஹெரால்டு - தகவல்: பாலி

அத்தை கொஞ்சம் இடம் கொடுத்தால் மனம் விட்டுப் பேசலாம்; வேலையைப் பற்றி மட்டும் இல்லை; அந்த வாலிபனைப் பற்றியும்தான்!

''ஆகட்டும். நாளைக்கு வந்து பார்க்கிறேன்.''

அவன் ஒரு காகிதத்தை மூலையில் துண்டாகக் கிழித்து விலாசத்தை எழுதிக் கொடுத்தான். அவன் புறப்பட்டுப் போய்ச் சிறிது நேரம் வரையில் அத்தை எழுந்திருக்கவில்லை.

அத்தையிடம் அவை பழுது பார்க்கப்பட்டு விட்டதைப் பற்றிச் சொன்னேன். அந்த வாலிபனைப் பற்றி எதையும் சொல்லவில்லை.

மறு நாள். அத்தையிடம் ஏதோ ஒரு சாக்கைச் சொல்லிவிட்டு, விலாசத்துடன் பஸ்ஸுக்குக் கிளம்பினேன். புதிதாய் எழுதக் கற்றுக் கொண்ட குழந்தையைப் போல் என் மனத்துள் ஒரு வியப்பும் மகிழ்ச்சியும் விரிந்தன. நான் கேட்கப் போவது — அந்த வாலிபனின் பதில்—மறுபடியும் என் பேச்சு — எல்லாவற்றையும் நினைத்து ஒத்திகை பார்த்துக் கொண்டேன்.

வாசலில் காலை வைத்தபோது படபடவென்று 'டைப்' அடிக்கும் ஓசை. தலையை உள்ளே நீட்டினேன். அவன்தான் உட்கார்ந்திருந்தான். என்னைப் பார்த்ததும் புன்னகையோடு ஒரு பணிவான வரவேற்பு.

''உங்களுக்கு டைப் செய்யத் தெரியுமா?''

''தெரியும்'' என்றேன். அந்தக் கடிதத்தை என்னிடம் கொடுத்தான். அருகே அவன் உட்கார்ந்திருந்தபோது எனக்கு விரல் ஓடவில்லை. அதைப் புரிந்துகொண்டவனைப் போல் எழுந்து உள்ளே போய்விட்டான்.

சற்று நேரத்தில் அவன் திரும்பி வந்தான். கடிதம் தயாராகிவிட்டது. கருவியிலிருந்து எடுத்து ஒரு முறை கவனித்தான். 'குட்!' என்று சொல்வது போல் என்னைப் பார்த்தான். நேற்று அவன் வேலைக்கு என் பாராட்டு. இன்றைக்கு என் வேலைக்கு அவன் பாராட்டா ?

''அப்பா உங்களைக் கூப்பிடுகிறார்.''

''எதற்கு?''

''உன்னைப் பார்க்கத்தான் என்று வைத்துக் கொள்ளேன்.''

நெஞ்சில் மீன் குட்டிகள் துள்ளி எழுந்தன. உணர்ச்சிகளின் அலை மோதும் வேகம். உள்ளே கதவைத் திறந்து நுழைந்ததும் தலையை நிமிர்ந்தேன். சட்டென்று கால்கள் விட்டுக் கொண்டன. பூமி காலடியிலிருந்து நழுவிற்று. அத்தை!

எங்கிருந்து வந்தாள் அத்தை ? எல்லாம் தெரியுமா அவளுக்கு? இல்லை — எல்லாமே முன்னேற்பாடா? அத்தை சொன்ன அந்த உறவினர்—இந்த வாலிபனின் தந்தைதானா?

''இவள்தான் என் தம்பி மகள் சாரு. முதல் பெண். நன்றாகப் பார்த்துக் கொள் விசுவம். பையன் நேற்றைக்கே பார்த்துப் பேசிவிட்டான் !''

அவர் சிரித்துக் கொண்டார். ''உட்காரம்மா சாரு ! என்ன சொல்கிறான் சேகர் ?''

என் தைரியம் அவ்வளவும் ஒடுங்கிப் போயிற்று. தலையைக் குனிந்தபடி நாற்காலியில் உட்கார்ந்தேன். என் கண் பார்வைக்கு, பாலிஷ் செய்த அவர் கால் பூட்ஸின் பளபளப்பு மட்டுமே தெரிந்தது. அவருக்குத் தெரியுமா எல்லாம் ? இல்லை, என்னைப் போல் அப்பாவிதானா ?

வீட்டுக்குத் திரும்பினோம்.

''என்ன அத்தை இதெல்லாம் ?'' என்று செல்லமாக அத்தையிடம் கோபித்துக் கொண்டேன்.

''என்ன நடந்துவிட்டது இப்போது ? நானாக அழைத்து அறிமுகம் என்று ஆரம்பித்தால் நீ மறுத்துப் பிடிவாதம் செய்வாய். இப்போது நீயே முனைந்து ஈடுபட்டு வந்து நிற்கும்போது என் காரியம் சுலபமாகிவிட்டது. ஒரு 'சிம்பிள் சைகாலஜி'. அவ்வளவுதான்'' என்றாள் அத்தை தாயின் பரிவோடு.

''என்ன நடந்தது அக்கா ?'' என்று கேட்டுக் கொண்டே நுழைந்தாள் ஷாபா. கல்லூரியில் பிற்பகல் விடுமுறை போல் இருக்கிறது. அவளைத் தோளை அணைத்து இழுத்தபடி சமையல் அறைக்குள் அழைத்துக் கொண்டு போனேன் ; முழுவதையும் சொன்னால் சிறுகதையைப் போல் இருக்கும்.

உள்ளே போய்ச் சேர்ந்தாற்போல் இரண்டு வார்த்தைகள் பேசி இருக்கமாட்டோம். அத்தையின் குரல் கேட்டது: ''ஷாபா! நீ மட்டும் இங்கே வா ! இது என்ன நான் உன்னைப் பற்றிக் கேள்விப்படுவது !''

திருதிருவென்று ஒருவரைப் பார்த்து மற்றவர் விழித்தோம். கடவுளே ! அத்தைக்குத் தெரியாதது எதுவுமே இல்லையா?

# இறுதியாக—செயற்கை இழைத் துணிகளுக்கு ஒரு வெண்மை தரும் சாதனம்

# டினோபால்®-எஸ்

டெரீன்®, 'டெரீன்'/காட்டன், நைலான் முதலான துணிகளுக்கு வெண்மை தருகிறது

# Tinopal®-S

உங்களது செயற்கை இழை மற்றும்
கலப்பு இழைத் துணிகளை சலவை செய்த
பிறகு கடைசியில் அலசுவதற்கு முன்,
தண்ணீரில் சிறிது டினோபால்-எஸ்
சேர்க்கவும். உங்கள் வெள்ளைத் துணி
களில் மிகுந்த வெண்மை பளிச்சிடும்.
டினோபால்-எஸ்ஸின் திறனால் தடவைக்கு
தடவை வெண்மை மிளிரும்!

**இன்றே டினோபால்-எஸ் வாங்குவீர்**




## டினோபால்®-எஸ்

செயற்கை இழைத்
துணிகளுக்கு
சிறந்த வெண்மை தருகிறது

Shilpi HPMA 13 B/73 Tam



இன்ஸ்பெக்டர் விக்ரம்
கதை:
படம்:
12
கதாநாயகி போலீஸ் தலைமையகத்தை அடைந்தாள்.
என் கண்கள் என்னை ஏமாற்று கின்றனவா?
விக்ரம் ! இதைக் கேள் ! நான் நிறைவேற்ற வேண்டிய பணி ஒன்றிருக்கிறது!
என்ன விஷயம்?
சம்பல் பள்ளத்தாக்கின் ராஜா லால்சிங்கை நீ கைப்பற்ற வேண்டுமா?
எங்கே இருக்கிறான் அவன் ?
அவன் சரணடையத் தயார். ஆனால் ஒரு நிபந்தனை. நீ அவன் தண்டனையைக் குறைக்க உதவ வேண்டும்.
அவன் புனர் வாழ்வு நடத்த உத்தேசித்தால் நான் அவனுக்கு உதவக் காத்திருக்கிறேன்.
எப்போது அவனை நான் காண்பது ?
நாளை சூரிய அஸ்தமனத்துக் குப் பிறகு அவன் உனக்காகப் பள்ளத்தாக்கில் காத்திருப்பான்.
ஏன் இங்கு வரக்கூடாது அவன்?
11-21
அவன் உன்னோடு பேச விரும்புகிறான். நீ அவனுக்கு உதவுவாய் என்பதில் அவனுக்கு நம்பிக்கை ஏற்பட்டால் உன்னைப் பின்தொடர்ந்து இங்கு வருவான்.
மறக்காதே! நீ தன்னந்தனியாகப் போக வேண்டும்.
சரி அம்மணி! நாளை சூரிய அஸ்தமனத் துக்குப் பிறகு தன்னந் தனியாக..!
(தொடரும்)

# சிக்கல் மிகுந்த சிக்கில் பாடம்

**கமலினி நாகராஜன்**

**ப**ல ஆண்டுகளுக்கு முன்பு ஸ்ரீமதி சுந்தரி ஸ்ரீதரானி என்பவர் தில்லி மாநகரில் திரிவேணி கலா சங்கத்தை ஆரம்பித்து, பரத நாட்டியம், மணிபுரி, ஹிந்துஸ்தானி பாட்டு, வாத்தியங்கள், ஓவியம் முதலியவை கற்பிக்க வகை செய்தார். அதில் பரத நாட்டியப் பிரிவிற்கு, காலஞ்சென்ற ஈ. கிருஷ்ணையரின் சிபாரிசுடன் சிக்கில் ஸ்ரீ ராமசாமிப் பிள்ளை ஆசிரியராக நியமிக்கப்பட்டார். பொதுவாக எல்லோரும் ரிடையர் ஆகும் வயதில் பிள்ளையவர்கள் வேலையில் சேர்ந்தார். அப்போது அவர் வயது அறுபதுக்கு மேலே!

அங்குதான் ஸ்ரீமதி இந்திராணி ரெஹ்மான் அவரிடம் நாட்டியம் பயிலத் தொடங்கினார். சில தென்னிந்தியக் குழந்தைகளும், பல வட இந்தியக் குழந்தைகளும் பரதம் கற்கத் தொடங்கினர். அவர்களில் ஒருவர், தற்சமயம் திரைவானில் சுடர் விடும் ஹேமாமாலினி. நான் 1959-ம் வருடத்திலிருந்து பிள்ளை அவர்களிடம் தனிப்பட்ட முறையில் எங்கள் வீட்டிலேயே பயிலத் தொடங்கினேன்.

சங்கீதம், நாட்டியம், தவில் மூன்றிலும் சிறந்த பயிற்சி பெற்றவர் அவர். நுணுக்கமான கோவைகளை அமைக்கும்போது பாடிக் கொண்டே ஜதிகளைத் தட்டிக் காண்பிப்பார். மிருதங்கச் சொற்களையும் சொல்லிக் காட்டிவிடுவார். அதனால், பாடுபவர், மிருதங்கக்காரர், ஆடுபவர் யாருக்கும் தாளம் இம்மியும் பிசகாது.

தம், பதினாறாவது வயதில் அக்காலத்தில் மிகப் பிரபலமாயிருந்த திருவாரூர் ஞானத்தம்மாளுக்கு முதன் முறையாக நட்டுவாங்கம் செய்ய நேர்ந்தது பற்றிக் கூறியிருக்கிறார். அந்நாளில் மேடையில் நின்று கொண்டு தான் நட்டுவாங்கம் செய்வார்களாம்.

எங்கள் வீட்டில் அவர் சிக்கில் 'தாத்தா' தான். பக்கவாத்தியக்காரர்கள், ''சிக்கில் பாடங்களில் பல சிக்கல்கள் உண்டு. ஊரும் சிக்கில், எடுப்பும் சிக்கல், ததிங்கிணதோமும் சிக்கல்'' என்று சிலேடையாகப் பேசுவார்கள்.

தாத்தா அபிநயம் பிடித்துக் காட்டும்போது அவர் வயது மறைந்து போகும். வாலைக் குமரி அபிநயம் பிடிப்பது போல் இருக்கும். ஒரு சமயம் பிரபல வடஇந்தியர் ஒருவர் கச்சேரி ஏற்பாடு செய்யும்பொருட்டு எங்கள் வீட்டுக்கு வந்தார். தாத்தாவை அறிமுகப்படுத்தினோம். அவர் என் தகப்பனாரிடம் ஆங்கிலத்தில், ''இந்தக் கிழவரா அபிநயம் சொல்லிக் கொடுக்கிறார்? இந்த வயதில் இவரால் என்ன செய்ய முடியும்?'' என்று கேட்டார். அவர் சொன்னதைத் தாத்தாவிடம் சொல்லி ஏதாவது அபிநயம் பிடித்துக் காட்டும்படி கேட்டுக் கொண்டோம். உடனே ''நேராக வந்தவர் யார் சகி?'' என்ற பதத்திற்குப் பலவித அபிநயங்களைப் பிடித்துக் காட்டினார். வந்தவர் தாம் சந்தேகப்பட்டதற்காக மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

தாத்தாவுக்கு ஆங்கிலம் தெரியாது. ஹிந்தி தெரியாது. ஆனாலும் நாள்தோறும் அயராமல் ஐம்பது அறுபது குழந்தைகளுக்குக் காலை மாலை இரு நேரமும் நடனம் பயில்வித்தார். வெளிநாட்டுப் பெண்கள் பலரும் தாத்தாவிடம் பயிற்சி பெற்றிருக்கின்றனர். யாமினி கிருஷ்ணமூர்த்தியும் சில உருப்படிகள் கவனம் செய்திருக்கிறார்.

1963ம் வருஷம் தை மாதம் ஒரு நல்ல நாளில் எங்கள் வீட்டிலேயே ஒரு நாட்டிய வகுப்புத் தொடங்கி வைத்தார். தொடக்கத்தில் நான்கு மாணவிகள். அதில் இருவர் என் தங்கைகள். யார் ஆசிரியர்? நான்தான். இப்படித்தான் எனக்கு நட்டுவாங்கத்தில் பயிற்சி அளித்தார். மூன்று வருஷங்கள் கழித்து என் முதல் மாணவிக்கு அரங்கேற்றம். என் பதினாறாவது வயதில் தாத்தாவுடன் சேர்ந்து நட்டுவாங்கம் செய்யும் பாக்கியம் பெற்றேன். அவ்வளவு பெரிய 'அந்தஸ்து' அவர் வழங்கியது எனக்குப் பெருமையே. அவர் தொடங்கிவைத்த பள்ளிக்கு 'நூபுரம்' (சலங்கை) என்று பெயர் வைத்தார்.

எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தது போல்' அமைந்தது அவர் கடைசியாக நடத்திய வைபவம். சென்ற ஜூன் மாதம் 5, 6 தேதிகளில் தில்லி ஸ்வாமிநாத ஸ்வாமி கோயில் கும்பாபிஷேக வைபவத்தின் போது பலவித உபசாரங்களில் நிருத்திய உபசாரத்தை நடத்தி வைத்தார். இரவு 12 மணிக்கு மேல் நான் ஆடிய கவுத்துவம், பதம், தில்லானா முதலியவற்றுக்குச் சற்றும் சோர்வடையாமல் நட்டுவாங்கம் செய்தது மிகப் போற்றற்குரியது. அவரது உற்சாகத்தை நோக்கினால் அவர் வயதை யாரும் கணித்திருக்க முடியாது. இரு அரசாங்க விருதுகளைப் பெற்ற அவர் இயற்கை எய்திய போது அவர் வயது 83.

அவர் கடைசியாகத் தில்லி விட்டுச் செல்லும் முன் நூபுர மாணவிகளுக்கு நான்கு வகைப் பின்னல் கோலாட்டம் சொல்லிக் கொடுத்தார். ''நான் செத்துப் போனாலும் இதையெல்லாம் சாக விடாதீங்க'' என்று அவர் அன்று சொன்னதை இன்று நினைத்தாலும் நெஞ்சு நெகிழ்கிறது.

கட்டுரை நாயகரும் கட்டுரை ஆசிரியையும்



உங்களுக்கு அய்யாக்கண்ணுவைத் தெரியாதல்லவா?... தெரியாதவரையில் க்ஷேமம். தெரிந்திருந்தால் ஆலோசனை கேட்க அவர் உங்களிடம் வந்துவிடுவார்; பிறகு 'அய்யாக் கண்ணுவின் கௌரவ ஆலோசகர்' என்று எனக்கு நானே சூட்டிக் கொண்டுள்ள பட்டம் பறி போய்விடும்.

எக்ஸ்பெல்லர் ஏகாம்பரம் அண்டுகோ-வில் அவருக்கு வெகு நாளைய சர்வீஸ். அதாவது அவருக்கு மீசை முளைத்தது, நரைத்தது எல்லாமே அங்கேதான். பின்னுக்குக்குப் புள்ளி போட்டுப் போட்டு முகத்தில் சதா எண்ணெய் வழிந்து கொண்டிருந்தது என்பதற்காக அவரை அழகற்றவர் என்று ஒதுக்கிவிட முடியாது. பிசிர் பிசிரான புருவங்களுக்குக் கீழே செருகிக் கொண்டிருந்த அவரது கொட்டை விழிகள், அவை இருக்க வேண்டிய இடத்தை விட்டு ஓர் அங்குலம் மேல் நோக்கிச் சுழன்று கொண்டிருந்ததென்னவோ உண்மைதான். அதற்காக அவரைப் 'பிசிராந்தையார்'



# எனிக்கீக் கல்யாணம் கழிஞ்ஞிட்டில்லா!

'பட்டாஸ்'

என்று கூப்பிட்டு விட முடியுமா? ஆகாயப் பந்தலை ஆராயும் அண்ணாந்த பார்வையும் அழுக்கி வைத்த மூக்கும் கூட அவருக்கு ஒரு தனிச் சோபையைத் தரத்தான் செய்தன. மொத்தத்தில் அவர் 'அழகு ராசா' என்பதில் ஐயமில்லை.

'அழகு ராசா' என்பது நான் கொடுத்த விருதோ என்று அலட்சியமாக எண்ண வேண்டாம். சாட்சாத் அவரது காலஞ்சென்ற தர்மபத்தினி காமாட்சியம்மாள் பரம ரகசியமான சந்தர்ப்பத்தில் அவருக்கு வழங்கிய பட்டம் அது.

சத்தியமாகச் சொல்லுகிறேன், ஒட்டுக் கேட்கும் பழக்கம் எனக்குக் கிடையாது. ஏதோ சில சமயங்களில் ஆலோசனை வழங்க வேண்டும் என்ற ஆதங்கத்துடன் அவரைத் தேடிப் போவதுண்டு. நேரம் இரவாகவோ, பகலாகவோ இருக்கலாம். உள்ளேயிருந்து கிசுகிசுப்புக் கேட்கிறதே, ஏதும் எக்கச் சக்கமோ என்று என் சாண் உடலையும் கூசிக் குறுகிய வண்ணம் சுவரோடு சுவராக ஒட்டிக் கொண்டு நிற்பேன்.

''காமாட்சி! என்னை உனக்குப் புடிச்சிருக்குதா?...''

''உம்... ஓங்களுக்கென்ன கொறைச்சல், என் அழகு ராசா...''

இத்தியாதி உரையாடல்கள் பராபரியாகக் காதில் விழுவதைத் தடுக்கவும் மாட்டாமல் கதவைத் தட்டவும் முடியாமல் கால் மணி நேரம் போல் செயலற்றுத் தவித்துவிட்டு எத்தனையோ முறை போன சுவடு தெரியாமல் திரும்பி வந்திருக்கிறேன்.

இதெல்லாம் ஐந்து வருடங்களுக்கு முன்னால். பாவம், விவாகமாகி ஏழெட்டு ஆண்டுகள் கூட அவர் திருப்தியாகக் குடித்தனம் நடத்தவுமில்லை, அந்தத் தாம்பத்தியத்தின் அடையாளமாக 'அவள்' வயிற்றில் ஒரு 'புழு பூச்சி' வைக்கவுமில்லை. அதற்குள் அவள் சிவலோகத்துக்கோ, வைகுண்டத்துக்கோ போய்ச் சேர்ந்து விட்டாள்.

அய்யாக்கண்ணு ஏற்கனவே படு சுருசுருப்பு, மனைவி இறந்த பிறகு எதுவுமே நேராக வராதபடி மூளை சண்டித்தனம் செய்தது.

எண்கள் இ ர ட் டை இரட்டையாகத் தெரியவே, கூட்டுப் புள்ளியில் குழப்பம்; வரவு பத்திக்கும் செலவு பத்திக்கும் வித்தியாசம் மறந்து போய், ரொக்க இருப்பில் குளறுபடி; காலன்னாவில் ஆரம்பிக்கும் வாடிக்கையாளரின் பெயர்களெல்லாம் 'காமாச்சி'யாகத் தோன்றப் போய், பேரேட்டில் பெருந் தகராறு. ஆகக்கூடி ஐந்தொகை கழுதையாக உதைத்தது. இந்த 'அப்பழுக்கற்ற' வேலையைக் கண்டு அதி சந்தோஷம் அடைந்த முதலாளி அஷ்டோத்தரத்தில் ஆரம்பித்து, லட்சார்ச்சனைக்கு வந்துவிட்டார். அரண்டுபோன அய்யாக்கண்ணு என்னிடம் ஓடி வந்தார். என்னை விட்டால் அவருக்கு யோசனை சொல்லக் கூடியவர்கள் வேறு எவருமில்லையே!

''பேசாமல் இன்னொரு கல்யாணம் பண்ணிக்கொண்டு விடுங்களேன் அய்யாக்கண்ணு!''

''ஹூம், என் அளகு கெட்ட கேட்டுக்கு அது ஒண்ணுதான் கொறைச்சல்...''

''அது என்ன அப்படிப் பெருமூச்சு விடறீங்க? உம்ம அழகுக்கு என்ன கேடு! வயசும் நாற்பத்தஞ்சுக்கு மேலே இருக்காதே!''

''நாப்பத்தி எட்டு!...''

''ப்பூ, இவ்வளவுதானே!பேசாமல் இருங்க, நானே நல்ல பெண்ணாகப் பார்த்து...''

''அட நீங்க ஒண்ணு!...''

தமது கல்யாணப் பளுவை என் தலைமீது சுமத்திவிட்டு அவர் போய்விட்டார். நான் பேயாகத் திரிந்து நாயாக அலைந்தேன். 'தடுக்கி விழுந்தால் ஆயிரம் பெண்' என்று எண்ணிக் கொண்டிருந்த எனக்கு அப்போது தான் புரிந்தது, விஷயம் அத்தனை சுலபமான காரியமல்ல என்று.

போன இடத்திலெல்லாம் சொல்லி வைத்தது போல் அய்யாக்கண்ணுவின் வடிவழகை



அங்கம் அங்கமாக விமரிசித்தார்கள். ஆண்டுகள் ஓடிக் கொண்டிருந்தன. என் முயற்சியும் தொடர்ந்து நடந்தது.

அன்று மதுரையில் ஒரு நாற்பத்தைந்து வயதுப் பெண்(?) இருப்பதாக யாரோ சொன்னார்கள். இந்த நல்ல சமாசாரத்தை அவருக்கு 'எக்ஸ்பிரஸ் டெலிவரி' செய்ய வேண்டுமென்று அவர் வீட்டுக்கு ஓடினேன்.

ஓடினேனா, வாசற் கதவு மூக்காலே மூணு வீசம் மூடியிருக்க, உள்ளேயிருந்து 'கல்ங் குல்ங்' என்று பெண் குரல் கேட்பது போல் இருந்தது. ஆச்சரியத்தால் என் ரோமங்கள் குத்திட்டன. எனக்குத்தான் ஒட்டுக் கேட்கும் பழக்கமில்லையே! வழக்கம்போல் சந்தடியின்றி மூச்சை அடக்கிக் கொண்டு சுவரோடு சுவராக நின்றேன். புதுக் குரல் தேனாகக் குழைந்தது.

"எந்தா, நிங்ஙள் எந்தினெ திவஸம் ஒட்டல்லே சோறு சாப்பிடுன்னது?"

"அது என் தலைவிதி! மொதல்லே நீ யார், எங்கே வந்தே? அதைச் சொல்லு!"

"ஹெஹ, ஞான் யாரோ!... நிங்ஙள் ஆபீஸுக்குப் போகும்போ ஈ தெருக் கோடி வீட்டு மாடியிலே திவஸம் என்னெப் பாக்குன்னதில்லையோ?"

"தெவசமும் பாக்கல்லே, திதியும் பாக்கல்லே! என் கண்ணு எப்பவுமே கொஞ்சம் மேல் பக்கமாச் சொருண்டுக்கிட்டுத்தான் இருக்கும். அதுக்காக? ஒன்னைப் பாத்தேன்னு அர்த்தமா?"

'களுக்'கென்ற சிரிப்பு.

"இத பாரம்மா, அந்த வருசமா இது பொம்பளை வாடை அடிக்காத வீடு. இங்கே நீ சிரிச்சுக்கிட்டு நிக்கிறதைப் பார்த்து யாரும் தப்புக் கணக்குப் போடறதுக்கு முன்னாடி...."

"...உம் எனிக்கி அவசரமாயி ஒரு பத்து ருப்பிக வேணம்... நாளெ தீர்ச்சயாயி மடக்கித் தராம்."

"அம்மா மகராசி, இந்தா பத்து ரூபா. நீ மடக்கவும் வேணும், திருப்பவும் வேணும். எடத்தைக் காலி பண்ணினாப் போதும்."

"இத்தர உதார புருஷனாய நிங்ஙள் எந்தினெ கல்யாணம் கழிக்காத்தது?"

"இத பாரம்மா, புண்ணியவதி!"

"புண்ணியவதிஅல்லா. எம்பேரு மாதவி!"

"சரிசரி, நீ மாதவியோ, கண்ணகியோ, என் சிநேகிதர் வர்ற நேரமாச்சு. அந்த மனுஷன் இங்கே ஒன்னைப் பாத்துட்டா நிச்சயமா என்னைக் கோவலன்னு நினைக்கக் கதை கட்டிடுவான். தயவுசெய்து போயிடு."

"என்னால் ஞான் நாளெ வரும்.... உம்... நிங்ஙக்கு அறியுமோ?... எனிக்கும்...இன்னும் கல்யாணம் கழிஞ்ஞிட்டில்லா!..."

அவள் கிண்கிணிச் சிரிப்புடன் வெளியே வந்தாள். நான் ஒதுங்கிக் கொண்டேன்.

கொத்துகின்ற மூக்கும் குத்துகிற விழிகளுமாக நாற்பத்தைந்தைத் தாண்டிய அந்தக் 'குதிர்' மாதவி அவசரமாக அசைந்து மறைந்தாள். அய்யாக்கண்ணுவுக்குச் சரியான ஜோடி என்று கணக்குப் போட்டது என் மனம்.

நான் தொண்டையைக் கனைத்துக் கொண்டு உள்ளே நுழைந்தபோது அய்யாக்கண்ணு மண்டையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். அவரது சுரத்தில்லாத முகம் சுரைக்காய் போல் நீண்டிருந்தது.

"என்ன தலையிலே கையை வச்சுட்டீங்க?"

"என் தலையிலேதானே வைச்சுக்கிட்டேன். இன்னையோட வேலைக்கு முழுக்குப் போட்டாச்சு!"

"ஐயையோ!... ஏன் அப்படி?"

"பின்னே என்னங்க, முதலாளிக்கு வரவர என்னைக் கண்டாலே பிடிக்கல்லே. எடுத்ததுக்கெல்லாம் தப்புக் கண்டுபிடிச்சு ஏசறதே பொளப்பாப் போயிட்டா எத்தனை நாளைக்குத்தான் பொறுக்க முடியும்? கணக்கு எழுதற கைக்குக் கால் கடுதாசு 'எழுதறதா கஷ்டம்?"

"அப்பா?...மேலே என்ன பண்ணறதா..."

"மேலே என்னங்க, இப்படியே... காசி ராமேசுவரம்னு யாத்திரை கெளம்பறதா தீர்மானம் பண்ணிட்டேன்."

"அதாவது வைதீக முறைப்படி கல்யாணத்துக்கு முன்னே மாப்பிள்ளை காசி யாத்திரை கெளம்பறாராக்கும்!"

"என்ன சொல்றீங்க?"

"சும்மா ஜமாய்ங்க அய்யாக்கண்ணு. சகஜம்தானே, எனிக்கும் – கல்யாணம் – கழிஞ்ஞிட்டில்லா."

"அட, அந்த மலையாளிப் பொம்பளை பேசினதை ஒட்டுக் கேட்டீங்களாக்கும்! ஹும், இந்த அய்யாக்கண்ணு இதுக்கெல்லாம் மசியறவன் இல்லே. இதோ பாருங்க (பீரோவைத் திறந்து காண்பிக்கிறார்) ரூபாய் ஐம்பதாயிரம் பாங்கிக் கணக்கைத் தொடச்சி வாங்கி வந்து வைச்சுட்டேன். நாளைக்கு டிக்கட் ரிசர்வ்! புதன்கிழமை வண்டிக்கி அய்யாக்கண்ணு போயிடுவாரு!"

நான் ஏதோ சமாதானம் சொல்ல வாயெடுத்தேன். அதற்குள் அவரே மீண்டும் ஆரம்பித்தார்.

"இத பாருங்க, கொஞ்ச நாளைக்கு காசி, பண்டரி, பத்ரின்னு யாத்திரை பண்ணிட்டு, நிம்மதியா இமயமலைக்குப் போய் உக்காந்துடப் போறேன். நான் கெளம்பினப்புறம்; இந்த பீரோ, நாற்காலி எல்லாம் உங்களுக்கு!"

அதற்கு மேல் அவரைப் பரதேசம் போக வேண்டாமென்று தடுக்க எனக்கு மனமில்லை.

"உங்களை என்னவோ என்று நினைத்தேன் அய்யாக்கண்ணு, நீங்கள் உத்தமர். தீர்த்த யாத்திரையும் தெய்வ அருளும் எல்லோருக்குமே கிடைத்து விடுமா? உங்களுக்கு ஏதோ பூர்வ ஜன்ம புண்ணியம்..."

அய்யாக்கண்ணு முகத்தில் வைராக்கியம் ஜொலிக்கத் தொடங்கி விட்டதாகத் தோன்றவே அவரது சமாதியைக் கலைக்க மனமின்றி அங்கிருந்து நகர்ந்தேன்.

தினமும் போய்ப் போய்ப் பேசினால் அவரது வைராக்கியம் குலைந்து விடப் போகிறதே, என்ற அச்சத்தால் அடுத்த மூன்று நாட்களுக்கு நான் அவர் வீட்டுப் பக்கம் தலை காட்டவேயில்லை. 'காசிக்குப் போகும்போது வந்து சொல்லிக் கொள்ளாமலா போய்விடுவார்?' என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்

## FCI

### இந்தப் பெயரையும் மாற்றுங்கள் !

உணவு கார்ப்பரேஷனில் லஞ்சம் ரொம்பவும் இருப்பதால் அதை அமைச்சரும் ஒப்புக் கொள்வதால் அதன் பெயரை Food Corporation of India என்பதற்குப் பதிலாக Food Corruption of India என்று மாற்றி விட்டால் என்ன ?

—பாலி

---

கையில், அவருக்குப் பதிலாக அவரது கடிதம் வந்தது.

அவர் எழுதியிருந்த கண்ணறாவிகளை நினைக்க, நினைக்க எரிச்சல் பற்றிக்கொண்டு வருகிறது. அப்படி என்ன எழுதியிருந்தார் என்கிறீர்களா? சொல்லுகிறேன் கேளுங்கள்.

கடைசியாக அவரைச் சந்திக்கும்போது எனக்கு பீரோவைத் தருவதாகச் சொன்னாரா, அதே போல் வீட்டிலிருந்த ஒவ்வொரு பொருளையும் யார் யாருக்கு எதைக் கொடுப்பதென்று இரவோடு இரவாக ஒரு பட்டியல் போட்டார்.

அப்போதுதான் அவரது காலஞ்சென்ற மனைவி காமாட்சியின் பஞ்சு மெத்தை அவரது கண்ணில் பட்டது. அந்தப் பிரியமான பொருளை யாருக்குக் கொடுப்பது என்ற பிரச்னை மனத்தைக் குழப்பியது. அதைக் கட்டி மார்போடு அணைத்துக் கொண்டு நள்ளிரவு வரையில் யோசித்தார். அதைப் பெற்றுக் கொள்ளும் தகுதி யாருக்குமே இருப்பதாகப் படவில்லை.

மெத்தையைப் பிரித்துப் போட்டுப் படுத்துப் பார்த்தார். பழைய நினைவுகள் தலை காட்டின. காமாட்சி அண்டையில் கிடந்து 'அளகு ராசா' என்று அன்பொழுக விளிப்பது போன்ற பிரமை.

ஒன்று சொல்ல மறந்து விட்டேனே — ஒண்டிக்கட்டை அய்யாக்கண்ணுவுக்கு ஒரு வேலைக்காரி. முப்பத்தைந்து வயதிருக்கும். அவள் பெயரும் காமாட்சிதான்.

அந்தக் காமாட்சி காலையில் வந்து கதவைத் தட்டியிருக்கிறாள். கனவுலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்த அய்யாக்கண்ணு சற்று உரக்கவே ''காமாச்சி... என் கண்ணு!'' என்று புலம்பிய வண்ணம் தூக்கக் கலக்கத்தோடு எழுந்து கதவைத் திறக்கவும் அவள் எசமானனின் அலங்கோலத்தைப் பார்த்து அதிர்ச்சியோடு விழித்துக் கொண்டு நின்றாள்.

''காமாச்சி! ராத்திரி பூரா தவிச்சுக்கிட்டிருந்தேன். வா வா, இந்தப் படுக்கை உனக்குப் புடிச்சிருக்குதா? ராத்திரிப் பூரா நான் தவிச்ச தவிப்பு அந்த ஆண்டவனுக்குத்தான் தெரியும்.... இன்னையிலேந்து இது ஒம் படுக்கை. ... ஏன் வாசப்படியிலேயே நிக்கறே?... உள்ளாறே வா, வா'' என்று அவளை வரவேற்கும் தோரணையில் கையை நீட்டிக் கொண்டே நமது கதாநாயகன் அவளை நோக்கி ஓர் அடி நகர்ந்திருக்கிறார். பளீரென்று அவரது கன்னத்தில் அறை விழுந்தது.

அடுத்த வினாடி அந்த வங்கிணி நடு வீதிக்கு ஓடிவந்து ''இக்கறுனே இக்கறுனே, கையெப் புடிக்க இக்கறுனே'' என்று கூப்பாடு போட்டு, ஊரைக் கூட்டிச் சந்தி சிரிக்க வைத்து விட்டாள்.

இதே சமயம் அவ்வழியே வந்த போலீஸ் வீரர் சடக்கென்று பிரேக் போட்டுக் கொண்டார். அவருக்கு அன்றைய சுந்தாயத்துக்குக் கேஸ் கிடைத்து விட்டதில் மகிழ்ச்சி. அய்யாக்கண்ணுவை இரும்புப் பிடியாகப் பிடித்து ஸ்டேஷனுக்கு வலித்தார்.

அவர்கள் அரை பர்லாங்குதான் நடந்திருப்பார்கள். அதற்குள் அய்யாக்கண்ணுவின் அபயக் குரல் அவரது தெய்வத்துக்கு எட்டி, அது கையிலே தரிகாய்ப் பையுடன் தெரு முனையில் பிரத்தியட்சமாகியது.

''எந்தா சேட்டன், ஸாரினெ எவ்விட கூட்டிக் கொண்டு போருன்னு?''

அய்யாக்கண்ணுவுக்குத் தமது கண்களையே நம்பமுடியவில்லை. எதிரே அந்த மலையாள பகவதி மந்தகாசமாக அபயம் கொடுத்துக் கொண்டு நின்றாள்.

''மாதவி, இது ஒரு வலிய அலால்ட்டு கேஸாணு! ... ஈ தெம்மாடி எந்து செய்து அறியாமோ?... இவனெ ஸ்டேஷன்லேய்க்குக் கொண்டு போய் லட்டியாலே—இவன் முட்டியைத் தட்டியால்...''

மாதவி அலறினாள். ''ஐயோ சேட்டா, அங்ஙனெ ஒன்னும் செய்யேண்டா!... இவர் நம்மட ஸாராணு!''

''நம்மட ஸாரோ?... மாதவி எந்தா பறயுன்னு!''

''உவ்வ சேட்டன்! இத்தேஹம் வளரெ உத்தமனாய வ்யக்தியா. இன்னலெ நமக்குப் பத்து ருப்பிக கடம் தந்நு ஸஹாயிச்சது இவர் தன்னே!''

''அங்ஙனெயோ மாதவி!''

தருமம் தலை காக்குமோ என்னவோ, அய்யாக்கண்ணு விஷயத்தில் கடன் கைகொடுத்தது. போலீஸ் வீரரின் உடும்புப் பிடி சட்டென்று விலகியது.

''ஸாரே, இவர் தன்னே என்டெ ஜேட்டன் கோவிந்தன் குட்டி'' என்று மாதவி தன் சேட்டனை அறிமுகப்படுத்த, அந்தச் சேட்டனும் ''க்ஷமிக்கணம் ஸாரே'' என்று மன்னிப்புக் கேட்டு இளித்தார்.

அப்புறம் என்ன ஆயிற்று என்று தெரிந்து கொள்ள ஆவலாயிருக்கிறதல்லவா? அதை அய்யாக்கண்ணுவின் சொந்த வாக்கியங்களிலேயே கேளுங்கள்.

''...ஏதடா அப்படிச் சொல்லி இப்படிச் சொல்லி இவன் யாத்திரை கிளம்ப மாட்டானோ என்று நினைக்க வேண்டாம். இந்த அய்யாக்கண்ணு சொன்னால் சொன்னதுதான். காசிக்கு இரண்டு டிக்கட்டு வாங்கியாகிவிட்டது. ஆமாம்; மாதவிக்கும் சேர்த்துத்தான்! 'கல்யாணத்துக்கு முன்னே காசி யாத்திரையா?' என்று கேட்ட உங்கள் வாய்க்கு எதைப் போடுவது என்று தெரியவில்லை. — அன்புள்ள அய்யாக்கண்ணு.''

அவர் என் வாய்க்கு எதைப் போட்டாலும் போடாவிட்டாலும் பீரோவுக்கு மண்ணைப் போட்டுவிட்டார். கடிதத்தில் அதைப் பற்றிப் பேச்சு மூச்சே இல்லையே!

# அனுராக்

அன்பான படம்; அனைவரும் அன்போடு பார்த்து வியந்து பெருமைப்படக்கூடிய படம்.

பார்க்கப் போனால் சின்னஞ் சிறு கதை. சொல்லப் போனால் பல் இயல்புள்ள பாத்திரங்களைப் படர விட்டுக் குணநிசயங்களைச் செழுமையாகச் சமைத்திருக்கும் கதை. சக்தி சாமந்தாவின் டைரக்ஷன் ஃப்பிரேமுக்கு ஃப்பிரேம் பளிச்சிட்டுப் பிரமையை உண்டு பண்ணுகிறது. திரையுலகம் திருப்பம் கண்டு பாரதத்துக்குப் பெருமை சேர்க்குமோ என்று!

அசோக்குமாருக்கு ஹிந்தித் திரையுலகம் சூட்டியுள்ள செல்லப் பெயர் தாதாமணி. தாத்தாப் பாத்திரம் ஏற்று நடிப்பால் படம் முழுவதையும் நிறைத்து 'மணித் தாத்தா' என்னும் புகழைச் சேர்த்துக் கொள்ளுகிறார்.

இக்கதையின் நாயகன், சிறுவன் சந்தனுக வரும் மாஸ்டர் சத்யஜித். தாத்தாவுக்குச் சரியான பேரன் என்பதை நடிப்பால் காட்டி உண்மையிலேயே ரசிகர்களை வெற்றிகொள்ளுகிறான் சத்யஜித்.

சந்தனுக்குத் தாயாக வருபவள் நூதன். நூதனமாக இளம் விதவை வேடம் தாங்கித் தாய்மையைப் பொழிந்து, தன் திறமையை நிரூபிக்கிறாள். அடக்கமான பாத்திரத்துக்கு வேண்டாத ஒரு திருஷ்டி தோஷம்! இளக் கவர்ச்சியை எங்கும் காட்ட முடியும் என்று காமிரா பெருமையைப் பறைசாற்றிக்கொள்ளவோ, என்னவோ! தாத்தாவையும் பேரனையும் தூங்க வைத்த பின், காற்றில் நூதனின் மேலாடை நழுவுவதாகவும் அதைச் சரி செய்து கொள்வதாகவும் ரசிகர்களுக்கு மட்டும் காட்டியிருப்பது ரசத்தில் ஒரு விரசம்!

பார்வையற்ற பெண் சிவானியாக வரும் மௌஷுமி சட்டர்ஜி இயல்பான நடிப்பால், இசைவான நகைப்பால் எல்லோருடைய மனத்தையும் கொள்ளை கொள்ளுகிறாள்.

காசில் கெட்டியான பாத்திரம் மட்டும் அல்ல மதன்புரி; நடிப்பிலும் கெட்டியான பாத்திரம்.

பூக்காரக் கங்காராமாக வரும் ராஜேஷ் கன்னு கொச்சை மொழியைக் கையாண்டு, ரசிகர்கள் அனைவரையும் தம்மைக் 'கா, கா' பிடிக்க வைத்து விடுகிறார்.

விநோத் மெஹ்ரா ராஜேஷ் என்னும் பாத்திரம் ஏற்று சிவானியிடம் மனத்தைப் பறி கொடுக்கிறார். 'காதலுக்குக் கண் இல்லை' என்பவர்களுக்குக் கண்ணைக் காட்டிலும் இதயமே தேவை என்பதை நிரூபிக்கிறார்.

அன்பைச் சுற்றிப் படர விட்டு அழுத்தமான சோகத்தில் முடியும் இக்கதையின் வசனங்கள் இளநகை ஓட வைத்து இதயத்தை எந்த முடிவுக்கும் தயார் செய்து விடுகின்றன. கதையின் முடிவு இப்படித்தான் இருக்க முடியும் என்பதைத் தேர்ந்த ரசிகர்கள் முடிவு செய்து விடுவார்கள் என்றாலும், அவர்களைக் கடைசிவரை உட்கார வைக்கும் பொறுப்பை நடிப்போடு இசையும் ஏற்றிருக்கிறது. எஸ். டி. பர்மன் அந்தப் பெருமையைப் பின்னணிப் பாடகர்களோடு பங்கு போட்டுக் கொள்ளுகிறார். லதா மங்கேஷ்கர், 'மேரா ராஜா பூஜோ ஏக் பஹேலி' என்னும் பாடலை இன்பம் – துன்பம் இரு நிலையிலும் உள்ளத்தைத் தொடப் பாடித் தம் பங்கை அதிகமாகவே தட்டிக் கொண்டு போகிறார். பாடல்கள் பொருத்தமான இடங்களில் பொருத்தப் பட்டது இன்னுமொரு விசேஷம். **அபிமான்** பொறுமை **அனுராக்கில்** பெருமளவுக்குப் பெருமையாக முகிழ்த்துள்ளது. **-ரா. வீ.**



# எஸ்ட்ரெலா சக்தி

இந்த சக்தி
தரும் ஒலி
உங்கள்
காதுகளில்
ரீங்காரம்
செய்கிறது.




இந்த சக்தி
தரும் ஒளியை
நீங்கள்
கண்ணெதிரே
காணலாம்





**உங்கள் டிரான்ஸிஸ்டர் மற்றும் டார்ச்சில் எஸ்ட்ரெலா சக்தி காட்டும் அதிசயம் பாரீர்!**

**எஸ்ட்ரெலா** பாட்டரிகளின் சக்தி: குடத்தில் காவேரிபோல!



எஸ்ட்ரெலா பாட்டரீஸ் லிட்., பம்பாய்–400 019.

CMEB-2-203

## 28. வற்கட வில்லன்

தனது அவல நிலையைத் தன் அன்பு நண்பனிடம் வாய் விட்டுச் சொல்ல நேரிட்டு விட்டதே என்ற வருத்தத்தாலோ என்னவோ, இதுகாறும் நிலவிய மகிழ்ச்சிக் களையெல்லாம் முகத்திலிருந்து வழிந்து போகத் தலையை நட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்த திருமலையின் கவனத்தை வேறு திசையில் திருப்பிக் கலகலப்பு ஊட்ட எண்ணினான் நரசு. ''அடடே, என்னப்பா இது! சில தினங்களுக்கு முன்னே பார்த்ததற்கும் இப்போது பார்க்கிறதுக்கும் உன் முகத்திலே என்னமோ ஒரு வித்தியாசம் தெரியுதே?'' என்று குறும்பாகச் சிரித்துக் கேட்டான்.

சட்டென்று நிமிர்ந்து அவனைத் திருதிருவென்று பார்த்த திருமலை, ''வித்தியாசமா?... எதைச் சொல்லறே?'' என்று வினவினான்.

''அதுதான் எனக்கும் தெரியலே! கொஞ்சம் அப்படியே இரு!... ஆ, இப்பக் கண்டுபிடிச்சுட்டேன்.''

''என்ன நரசு?''

''சே! என்ன அலங்கோலம் இது?''

''சொல்லேன்; என்ன இருக்குது என் முகத்திலே?''

''ரெண்டு பட்டாக் கத்திகள் தொங்குதடா!''

''பட்டாக் கத்திகளா...?''

''ஆமாம்; இந்த சைட் பர்ன்ஸ்! தூ, படுகோரம்!''

''ஓ....இதைச் சொல்றயா?'' என்று கேட்டு உரக்கச் சிரித்தான் திருமலை. ''இதுதான் அப்பனே, இப்போதைய புது ஃபாஷன்!''

''நான்சென்ஸ்! ஃபாஷன்னு அதிலே ஓர் அழகு, லட்சணம் இருக்கணும்.''

''யூ ஆர் ராங்! ஃபாஷன்னு ஏதோ புதிசு புதிசாக் கண்டுபிடிக்கிற நாகரிக மோஸ்தர்னு நீ நினைக்கிறே; அது சரியில்லே. மனித மனத்திலே அப்பப்போ ஏற்படுகிற வக்கிரத்துக்கு அது அடையாளம். அதை வைச்சுத்தான் அந்தந்தக் காலத்து மனித மனத்தின் போக்கு





களை நிர்ணயிக்கணும். ஒரு நாலைஞ்சு வருஷங்களுக்கு முன்னாலே இப்படி எவனுக்கும் கீழ்த் தாடை வரையில் கிருதா இறக்கி வைச்சிருந்தான்னா அவனை ஜனங்கள் உடனே ரௌடி, போக்கிரி, பொல்லாதவன், முரடன்னு தீர்மானிச்சுடுவாங்க. சினிமாவிலேயும் நாடகத்திலேயும் இந்தமாதிரி கிருதா வைச்சவனைப் பார்த்ததுமே அவன் வில்லன்னு முடிவு கட்டி விடுவாங்க. ஆனால் இப்ப, நல்லதையே பேசி, நல்லதையே செய்யற கதாநாயகன்கூட இப்படிப்பட்ட கோராவோடுதான் காட்சியளிக்கிறான். ஏன்னா, இப்போ இருக்கிற வாலிப உலகம் இதைத்தான் விரும்புது. இத்தகைய விருப்பம் அவங்களுக்கு ஏற்படக் காரணம் என்ன? அவங்க மனசிலே 'வில்லத்தனம்' வளர்ந்துக்கிட்டு வருதுன்னு அர்த்தம்! வேலையில்லாத் திண்டாட்டம் பெருகிப் போச்சு. வேலை கிடைச்சாலும் கூலி கிடைக்கலே; கிடைக்கிற கூலியும் வாழ்க்கைச் செலவுக்குப் போதலே. இன்னிக்கு இருக்கிற வாலிபர்கள் ஏதோ அழகுக்காக, ஃபாஷனுக்காக சைட் பர்ன்ஸ் வைச்சுக்கலே. அவங்களை அறியாமலே அவங்க மனசிலே வளருகிற வில்லத்தனத்தின் வெளி அடையாளம் அது. அவங்க வீட்டுக்கு மட்டும் வில்லன்களாக வளரலே; இந்த நாட்டுக்கும் வில்லன்களாக உருவாகிக்கிட்டு வராங்க. இந்த நாடு எங்களை வஞ்சிக்கிறது. எவ்வளவு காலத்துக்குத்தான் இதை நாங்கள் பொறுத்துக்கிட்டு இருப்போம்? இனியும் அப்படிப் பொறுக்க முடியாதுன்னு காட்டத்தான் எங்க முகத்திலே ரெண்டு பட்டாக்கத்திகளைத் தொங்க வைச்சிருக்கிறோம். இதுகளுக்குப் பேரு கிருதா இல்லே; என்றைக்கோ விழப்போகிற இடியின் மின்னல் கோடுகள். தெரிஞ்சுதா?''

திருமலை ஏதோ தமாஷாகப் பேசுகிறான் என்று எண்ணிச் சிரித்துக் கொண்டிருந்த நரசு, அவன் நிஜமாகவே ஆவேசம் வந்தவன் போல் முகம் சிவந்து, கண்களில் கனல் பறக்க ஆத்திரக் குமுறலுடன் இவ்வாறு பொரிந்து தள்ளியதைக் கேட்டு அப்படியே அயர்ந்து போய் விட்டான்.

தன்னுள் கிளர்ந்த கொதிப்பை அடக்கிக் கொள்ளவோ என்னவோ சட்டென்று எழுந்து அறைக்குள்ளாகவே உலாவினான் திருமலை. பிறகு, நாற்காலியில் அமர்ந்து ''அது சரி, நரசு! நீ மெட்ராசுக்கு வந்து இத்தனை நாட்கள் தங்கி யிருக்கிறாயே, என்ன காரியமா வந்தே? அது பற்றி என் கிட்ட இதுவரை ஒண்ணுமே சொல்லலியே!'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

அவனுடைய சூடெல்லாம் தணிந்து குளிர்ச்சியாகி விட்டது என்பதைப் புரிந்து கொண்ட நரசு, "முதல் நாள் உன்னைப் பார்த்தபோதே சொன்னேனே!" என்று புன்முறுவலுடன் இழுத்தான்.

"என்ன சொன்னே? சும்மா ஊரைச் சுற்றிப் பார்க்க வந்ததாய்ச் சொன்னதாக ஞாபகம். அதுவும் யாரோ ஒருவர் வீட்டில் வந்து தங்கி யிருக்கிறதாகச் சொன்னே. அது அந்தப் பெரிய மனிதர் வேதமூர்த்தியின் வீடு என்று என்னிடம் சொல்லாததாலே நானும் உன்மேலே அப்போ கோபிச்சுக்கிட்டேன். வேணுமின்னே அதை மறைச்சேன்னு அவசரப்பட்டு நினைச்சுட்டேன். எனக்கு அவரைத் தெரியாதுன்னு நெனச்சு நீ சொல்லலேங்கிறது அப்புறம்தான் எனக்குப் புரிஞ்சுது. அதுக்காக ரொம்பவும் வருத்தப்பட்டுட்டேன்" என்று ஓர் அசட்டுச் சிரிப்புடன் கூறினான் திருமலை. "அப்போ, சும்மா ஊரைச் சுற்றிப் பார்க்கத்தான் வந்தாயா?" என்று கேட்டான்.

"இல்லே திருமலை! எதனுச்சும் வேலை தேடிப் பார்க்கலாம்னுதான் வந்திருக்கிறேன்."

"அப்படியா?" என்றான் திருமலை ஆச்சரியத்துடன். "எங்கேயாச்சும் நம்பிக்கை வைச்சுக்கிட்டு வந்தாயா?... இல்லே..."



''முதலில் ஓர் இடத்தை நம்பிக் கிட்டுத்தான் வந்தேன். அது ஃப்ளாப் ஆயிடுத்து. ஊருக்குத் திரும்பிப் போக மனசில்லே. இன்னும் கொஞ்ச நாட்கள் இருந்து முயற்சி பண்ணிப் பார்க்கலாமேன்னு இருக்கிறேன்.''

''ஓ...அப்படீன்னு நீயும் கூடிய சீக்கிரம் என்னைப் போல் சைட் பர்ன்ஸ் வைச்சுக்குவே!'' என்று சொல்லிக் குபீரெனச் சிரித்தான் திருமலை. உடனே சிரிப்பை அடக்கிக் கொண்டு, ''உனக்குத்தான் அந்தப் பெரிய மனிதர் வேதமூர்த்தி ரொம்பவும் வேண்டியவராய் இருக்கிறார். அவரிடம் ஒரு வார்த்தை சொன்னால் அடுத்த நாளே உன்னைத் தூக்கிட்டுப் போய் எங்காவது ஒரு நாற்காலியில் — ஏன், அவருடைய கம்பெனி ஆபீசிலேயேகூட — உட்கார வைச்சுடுவாரே!'' என்றான்.

''வைக்கலாம்; ஆனால் நான் அந்த 'ஒரு வார்த்தையை' அவர்கிட்டே சொல்லணுமே! எனக்கு அம்மாதிரி எண்ணமில்லே. என் அம்மாவுக்கும் அதில் விருப்பமில்லே.''

''ஓ.....அப்போ நீ நிச்சயமா உன் கன்னங்களிலே பட்டாக் கத்திகளைத் தொங்க விட்டுக்க வேண்டியதுதான்!''

இருவரும் சேர்ந்து கலகலவென்று சிரித்தனர்.

''நரசு! நிஜமாய்த்தான் கேட்கிறேன்; நீ ஏன் இப்படி வேலை தேடி அலைய வந்திருக்கே? சொந்தத்திலேயே எதனாச்சும் ஒரு தொழிலைத் தொடங்கி நடத்தக் கூடாதா?''

திருமலையை ஒரு தினுசாக ஏறிட்டுப் பார்த்துச் சிரித்தான் நரசு. ''என்னைப் பற்றி அதிகப்படியாகக் கற்பனை பண்ணியிருக்கிறேன்னு நினைக்கிறேன்'' என்றான் கேலிக் குரலில்.

''என் நிலையில் நீ இல்லேன்னு நினைக்கிறது வரையிலாவது சரியாயிருக்கும், இல்லையா?''

''ஓரளவு சரிதான். ஏதோ கொஞ்சம் நிலம் இருக்குது. சொந்த வீடும் இருக்குது. கஷ்ட ஜீவனம் இல்லே. ஆனால் ஐயாயிரம், பத்தாயிரம் முதலீடு பண்ணி ஒரு தொழிலோ வியாபாரமோ தொடங்கி நடத்தும் அளவுக்கு ஐவேஜு கிடையாது.''

மெல்லத் தலையாட்டிக் கொண்டு மௌனமானான் திருமலை.

''சரி; நீதான் சொல்லேன் ஒரு யோசனை, நான் என்ன தொழில் தொடங்கலாம்னு?'' என்று குறும்பாகக் கண் சிமிட்டிக் கேட்டான் நரசு.

''சொல்லட்டுமா?''

''ஊம்.''

''கிரீடங்கள் உற்பத்தி பண்ணுகிற தொழிலகம் ஒண்ணு ஆரம்பியேன்! இதுதான் ஜனநாயகம் கொடி கட்டிப் பறக்கிற இந்த நாட்டுக்கும், அதிலே அறிவு பூர்வமாக வாழுகிற நம்ம ஜனங்களுக்கும் ரொம்ப ரொம்ப அவசரத் தேவையாக இருக்கிற பொருள்!''

நரசு சிரித்தான்.

''என்ன சிரிக்கிறே? நான் தமாஷ் பண்றேன்னு நினைக்கிறயா? நோ நோ, மிஸ்டர் நரசு! நிஜமாகத்தான் சொல்றேன். கிரீடம்னு ஏதோ வெள்ளி, தங்கம், வைரத்தாலே செய்யறதுன்னு நினைச்சுக்காதே; மலர்க் கிரீடம்! காய்க் கிரீடம்! கனிக் கிரீடம்! இப்படிப்பட்ட கிரீடங்கள் உற்பத்தி பண்ணுகிற தொழிலகம் ஒண்ணு ஆரம்பிச்சுப் பார், ஒரே வருஷத்தில் நீ இம்பாலாவிலே சவாரி செய்யலே; என் இந்த ஒரு பக்கத்துக் கேராவை அம்பேல் ஆக்கிடறேன்.''

நரசு வாய் விட்டுச் சிரித்தான்.

திருமலையின் முகம் சிவந்தது. சினம் செறிந்த குரலில் கூறினான்: ''நான் சொல்றதில் உனக்கு இன்னுங்கூட நம்பிக்கை ஏற்படலேன்னு நினைக்கிறேன். அதோ பார், அந்தத் தெருவிலே இருக்கிற சுவர்களிலும், மரங்களிலும், விளக்குக் கம்பங்களிலும் ஒட்டியிருக்கிற போஸ்டர்களைப் பார்! எல்லாம் பாராட்டு விழா, பிறந்த நாள் விழா, வெற்றி விழா, திறப்பு விழா, சிறப்பு விழா போஸ்டர்கள்! முன்னெல்லாம் சினிமாக்காரனுங்கதான் புடவை அளவு நீளமான வால் போஸ்டர்கள் போடுவானுங்க. இப்போ அதெல்லாம் சிறுத்துப் போச்சு. கட்சித் தலைவர்கள், மந்திரிகள், எம்.பி.க்கள், எம்.எல் ஏக்கள், எம்.சி.க்கள் — இவங்களுக்காகப் போடுற போஸ்டர்கள்தான் அகலத்திலேயும் நீளத்திலேயும் பருத்துப் போச்சு. இப்போ வால்போஸ்டர்களை வைச்சுத்தான் அரசியலே நடக்குது. அதாவது, போஸ்டர் அரசியல்! இதனால் இந்த நாட்டிலே அமோகமாய் வளர்ந்திருக்கிற ஒரே தொழில், போஸ்டர் அச்சடிக்கிற லித்தோ பிரஸ் தொழில்தான். இதை மூலத் தொழிலாக வைச்சு, மாலை, மலர்க் கிரீடம், பாராட்டுப் பத்திரம், கேடயம், பொன்னாடை முதலானவை உற்பத்தி பண்ணுகிற உப தொழில்களும் பிரமாதமாய் வளர்ந்து வருகின்றன. அதனால்தான் இந்த உப தொழில்களிலே எதனாச்சும் ஒண்ணை ஆரம்பிச்சு நடத்து! என்ன, நடத்தறயா ?''

ஆத்திரம் குமுற இவ்வாறு கேட்ட திருமலை மெல்லச் சிரித்துக் கொண்டே ''நல்ல வேளை, நான் ஓர் ஓவியனாக

பருத்தியிலே விளைந்திடும் கற்பனைகள் அற்புதமோ அதி அற்புதம்

# டிஸைசன்கள்



நேர்த்தியான மதிப்பு ....நறுவிசான பொலிவு ...
நல்லழகு ...
இயற்கைச் சிறப்பிலே இணையற்றது பருத்தி



**ஸென்ச்சுரி**– 100% பருத்தித் துணிகள்

தி ஸென்ச்சுரி ஸ்பின். அண்டு. மான்யு. கம். லிமிடெட், பம்பாய்-400 025

ADROIT-CM-533 P-TAM

"நான் ராபின் ப்ளூவைத்தான் உபயோகித்து வருகிறேன். காரணம், அது எப்பொழுதும் வெள்ளைத் துணி-உடைகளை மிகப் பளிச்சிடும் தூய வெண்மை ஆக்குகின்றது"

திருமதி ரேணு பி. ஏ. (ஆங்கிலத்தில் ஆனர்ஸ்),
நவீனகால குடும்பப் பெண்



## இதனை லடசக் கணக்கான பிற குடும்பப் பெண்களும் ஒப்புக் கொள்ளுகின்றனர்




வெள்ளைத் துணி-உடைகளை, ஸோப்பு அல்லது டிடர்ஜென்ட் கொண்டு வெளுக்கச் செய்வது மட்டும் போதாது. மிகப் பளிச்சிடும் தூய வெண்மை ஆக்குவதற்கு அவற்றை ராபின் ப்ளூவில் மூழ்கச் செய்தெடுக்க வேண்டும். ஒரு வாளி தண்ணீரில் ஒரு சிட்டிகை ராபின் ப்ளூ அற்புதமாக வேலை செய்யும்.

# ராபின் ப்ளூ

வெள்ளைத் துணி-உடைகளை மிகப் பளிச்சிடும் தூய வெண்மையாக சுத்தம் செய்கின்றது.

ARBC-36 TAM

**ரேகா** அனந்த்பாய்—ராம் வாயிர்கர்













இல்லே, நரசு! அப்படி இருந்திருந்தால் இந்த வால் போஸ்டர்களில் அச்சடிக்கிற அரசியல்வாதிகளின் போட்டோப் படங்களைப் பார்த்துப் பார்த்துப் பைத்தியம் பிடிச்சுப் போய் விஷம் குடிச்சுச் செத்து விட்டிருப்பேன்!'' என்றான்.

திருமலையின் இன்றைய பேச்சுக்களையும் பாவனைகளையும் கொண்டு அவனுடைய மனப் போக்கிலும் சிந்தனை வழியிலும் ஏதோ சில மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன, அல்லது ஏற்படுத்தப் பட்டுள்ளன என்பதைப் புரிந்து கொண்ட நரசுவுக்கு உள்ளூற ஒருவித அச்சம் கிளர்ந்தது. 'இனி நான் எங்கேயும் வேலை தேடப் போவதில்லை' என்று நேற்று அவன் சொன்னதையும் இப்போது நினைவுகூர்ந்தவனாய் அவனையே மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தான்.

இந்தச் சமயம் இரண்டு கண்ணாடித் தம்ளர்களில் டீ கொண்டு வந்து திருமலையிடம் கொடுத்தாள் கண்ணம்மா. கடையில் வாங்கிய டீ அது என்பது பார்க்கும் போதே தெரிந்தது.

அவளை ஓரக் கண்ணால் கவனித்தவாறு, ''ஒரு விஷயம் சொல்ல மறந்து விட்டேனே திருமலை! நான் தங்கியிருக்கிற வீட்டுக்கு வந்திருக்கிற அந்தக் கான்வெண்ட் பெண் உன்னையும் உன் தங்கையையும் ரொம்ப விசாரிச்சதாகச் சொல்லச் சொன்னாள்'' என்றான் நரசு.

சோகமே வடிவாய் இருந்த கண்ணம்மாவின் முகம் இதைக் கேட்டுக் கொஞ்சமாக மலர்ந்தது. ஆனாலும் அவள் நரசுவின் பக்கம் திரும்பாமலே கீழே இறங்கிப் போய் விட்டாள்.

இதுகாறும் உம்மென்று உட்கார்ந்து கொண்டிருந்த திருமலை ஒரு திடீர் உற்சாகம் அடைந்தவன்போல் நிமிர்ந்தான். ''அப்படியா? ரொம்பவும் நல்ல பெண்ணப்பா அவள்!'' என்றவாறு தன் கையிலிருந்த ஒரு டீத் தம்ளரை நரசுவிடம் கொடுத்தான்.

''ஆச்சரியம்தான்.''

''எதை ஆச்சரியம்னு சொல்லறே நரசு?''

''நீயும் ஒரு பெண்ணை நல்லவள் என்கிறாயே, அதை!''

திருமலையின் முகத்தில் அசடு வழிந்தது. அவன் பதில் ஏதும் சொல்லாமல் சிரித்தான்.

''எப்போதிருந்து இப்படி மாறினே?'' என்று அவன் வாயைக் கிண்டினான் நரசு.

''நான் எதிலே மாறிட்டேங்கிறே?''

''எனக்குத் தெரிஞ்சு நீ எந்த ஒரு பெண்ணையும் பெண்ணாகவே மதிச்சுப் பேசினதுமில்லே, நடந்து கொண்டதும் இல்லே.''

''வாஸ்தவம். அது என் தப்பில்லே. இந்தக் காலத்துப் பெண்களின் நடை உடை பாவனைகள் என்னை அப்படி ஆக்கி விட்டன. நீ வேணுமானால் ஒரு சினிமாத் தியேட்டருக்குப் போய், அங்கே டிக்கட் வாங்கக் கியூவில் நிற்கும் சகல தரப்புப் பெண்களையும் ஓர் அஞ்சு நிமிஷம் கவனிச்சுப் பார்; அப்புறம் பெண் குலத்தின் மீதே உனக்கு மதிப்பும் மரியாதையும் குறைஞ்சு போறதை நீயே உணர்வாய்!''

''அதைப் பற்றி இப்போ பேச்சில்லே. நான் கேட்கிறது வேறே.''

''அதாவது, வேதமூர்த்தியின் வீட்டுக்கு வந்திருக்கிற அந்தப் பெண்ணின் விஷயத்தில் நான் ஏதோ கொஞ்சம் மாறுதலாக நடந்து கொள்றேன், — பேசறேன்னு நினைச்சு, அது ஏன்னு கேட்கிறே, இல்லையா?''

''..................''

''உன்னுடைய ஊகம் சரிதான் நரசு! எனக்கும் அது தெரியுது. இல்லேன்னு மறுக்கலே. ஆனால் அதற்கான காரணத்தை நான் சொன்னால் நீ நம்புவாயோ, மாட்டாயோ?''

''சும்மா, சொல்லு! நம்ப முடியுதான்னு பார்க்கிறேன்.''

''பெரிசா ஒண்ணுமில்லே. அந்தப் பெண் உடை அணிந்திருக்கிற விதம் என்னை ரொம்பவும் கவர்ந்துவிட்டது. அதுதான் அவள் மேல் எனக்கொரு மரியாதையையும் மதிப்பையும் ஏற் படுத்திவிட்டிருக்குது.''

''நல்ல ஆளப்பா நீ! அதிசயமான ஆள்!'' என்று சொல்லி நகைத்தான் நரசு.

''அது சரி, நரசு! அந்தப் பெண் ணின் பேர் என்ன?''

''புஷ்ப சுகந்தி.''

திருமலை ஒருவிதப் பரவசக் கிறக்கத் துடன் நெஞ்சைத் தடவி விட்டுக்கொண் டான்.

''என்னப்பா, நெஞ்சைத் தடவுறே?''

''ஒண்ணுமில்லே, நரசு! அந்தப் பேரை ஒரு முறை வாய்க்குள்ளே சொல்லிப் பார்த்தேன்; நெஞ்சுக்குள்ளே ஏதோ ஒரு புஷ்பத்தின் சுகந்த மணம் வீசுறாப்பலே இருந்தது. அதான்....''

நரசுவுக்குத் திடீரென்று வேறொரு நினைவு வந்து விடவே இந்த விஷயத்தை இதோடு நிறுத்திவிட்டு, ''ஏன் திருமலே! இங்கே குடியிருந்த வங்காளி எங்கே? வெளியே போய் இருக்கிறாரா?'' என்று ஆவலும் அச்சமும் கலந்த குரலில் இரகசியமாகக் கேட்டான்.

''இல்லே; அவர் இந்த மாடிப் போர்ஷனைக் காலி செய்து விட்டுப் போய் விட்டார்.''

''அதுதானே பார்த்தேன்! இங்கே வரும்போதே இந்த அறைகள் வெறுமே கிடக்கிறதைக் கண்டு அப்படித்தான் இருக்கும்னு நினைச்சேன்.''

மௌனமாய் இருந்தான் திருமலை.

''அப்படீன்னு இப்போ இது காலி யாகிடுச்சுன்னு சொல்லு! இனிமேல் இங்கே வேறே யாராச்சும் குடிவரலாம் இல்லேயா?'' — வேதமூர்த்தியின் வீட்டி லிருந்து தான் இங்கு குடிவந்துவிட லாமே என்று திடீரென்று தோன்றிய ஒரு யோசனையின் பேரிலேயே இவ்வாறு கேட்டான் நரசு.

திருமலை குறுஞ் சிரிப்புடன், ''இல்லே நரசு! அவர் இங்கிருந்து போய்விட் டாரே தவிர இந்த வீட்டை இன்னும் காலி செய்துவிடவில்லே. வீட்டுச் சொந் தக்காரரிடம் அட்வான்சாகக் கொடுத்த மூணு மாசத்து வாடகைப் பணம் அப் படியே இருக்குது'' என்றான்.

''ஓ!'' என்று தலையாட்டிக் கொண் டான் நரசு. ''எதற்காக அவர் இங் கிருந்து வேறு ஜாகை பார்த்துக்கிட்டுப் போய் விட்டார்?''

''அதுதான் எனக்கும் தெரியலே.''

''இந்த வீட்டில் ரொம்பக் காலமாய்க் குடியிருக்கிறாரோ?''

''போன மாசம்தான் குடிவந்தார்.''

''அவர் மட்டும்தானா?''

''ஆமாம்.''

''அவருக்கு என்ன தொழில்?.... உத்தியோகம்?''

ஏதோ சொல்ல வாயெடுத்த திருமலை விஷமச் சிரிப்புடன் தலை குனிந்தபடியே, ''தெரியலே நரசு!'' என்றான்.

இதற்கு மேல் கேள்வி கேட்க நரசு வுக்குப் பிடிக்கவில்லை. திருமலை எதையோ தன்னிடம் மறைக்கிறான் என் பதைப் புரிந்து கொண்டதால் அவன் மேல் கொஞ்சம் வருத்தமும் ஏற்பட் டது. ''சரி; அப்போ நான் புறப்பட றேன்'' என்று உற்சாகமற்ற குரலில் கூறியவாறு எழுந்தான்.

ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவனுக் கூரையை அண்ணாந்து பார்த்தபடி நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்திருந்த திருமலை திடுமென்று எழுந்து, ''அடடே! இதற்குள்ளே புறப்பட்டு விட்டாயா?'' என்றான் குழறலாக. ''மறுபடியும் எப்போ வருவே நரசு?''

''நிச்சயமாய்ச் சொல்றதுக்கில்லே. நேரம் கிடைக்கும்போது வரேன்.''

சற்று நேரம் அவனையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்த திருமலை, ''சரி!'' என்றான் கமறலான குரலில். அவனது முகத்தில் இப்போது ஒருவித சோகம் படர்ந்தது. இருவரும் மாடியி லிருந்து கீழே இறங்கி வந்தனர்.

''உங்க வீட்டில் இருக்கிற அந்த ரெண்டு அக்காமார்களையும் நான் ரொம்பக் கேட்டதாகச் சொல்லுங்க!''

நரசு சட்டென்று திரும்பிப் பார்த் தான். வாசற்கதவோரம் வந்து ஒளிந் தாற்போல் நின்று கொண்டிருந்த கண்ணம்மாதான் இவ்வாறு கூறினாள்.

''ஆகட்டும்'' என்று புன்னகையுடன் சொன்ன நரசு, தன் நண்பனிடம் விடை பெற்றுச் சென்றான்.

'திருமலையின் தாயார் என்னை ஏன் இந்த வீட்டுப் பக்கம் வரவேண்டாம் என்று சொன்னாள்? ஏதோ என் நன் மைக்காகவே சொல்வது போல் இருந் ததே அவள் பேசிய தோரணை! அவளது வீட்டுக்கு வந்தால் எனக்கு என்ன கெடு தல் ஏற்படும் என்று அவள் நினைக் கிறாள்? அப்படி என்னைக் கெடுக்கக் கூடிய நபர் அவ்வீட்டிலே யார் இருக் கிறார்? அல்லது எனக்குப் பாதகமான விஷயம் அங்கே என்ன இருக்கக்கூடும்?'

இப்படியெல்லாம் எண்ணிக் குழம்பிய படி தான் ஏறிச் செல்ல வேண்டிய பஸ்ஸையும் எதிர்பார்த்து நில்லாமல் நடந்து கொண்டிருந்தான் நரசு. இப் போது அவன் மனத்தில் வேறொரு இதிலான கேள்வியும் எழுந்தது.


இந்த ஆண்டின்
குமரன்
புதிய டிசைன்கள்
முக்கனி • மனோரண்சிதம்
நீலவானம் • சுமங்கலி
புதிய கலர்கள்
பசுங்கிளி • ஸ்ரீ தேவி
நவ நாகரீக நங்கைகள் தேர்ந்தெடுப்பது
குமரன்
பட்டுப் புடவைகளே!
குமரன் சில்க்ஸ்
(பனகல் பார்க் எதிரில்)
தி. நகர், சென்னை-600017
போன்: 443544
தயாரிப்பு நிலையங்கள்:
காஞ்சீபுரம் & ஆரணி
Sarath

'என்னிடம் மற்ற எல்லா விஷயங்கள் பற்றியும் ஒளிவுமறைவின்றி மனம் திறந்து பேசும் திருமலை அந்த வங்காளிப் பேர்வழியைப் பற்றிக் கேட்டால் மட்டும் எதையும் தெளிவாகச் சொல்லாமல் மழுப்புகிறானே, ஏன்? இத்தனை நாட்கள் குடியிருந்த அவ்வீட்டைக் காலி செய்யாமலே அவர் திடீரென்று வேறு ஜாகை பார்த்துக் கொண்டு போகக் காரணம் என்ன?.... சில தினங்களுக்குமுன் நான் திருமலையைச் சந்தித்தபோது வேலையின்றித் தான் படும் அவஸ்தைகளை எவ்வளவு துயரத்தோடு சொன்னான்! ஆனால் இன்றோ அம்மாதிரி வருத்தப்படுவதாகவே தெரியவில்லை: அத்துடன் இனி தான் எங்கும் வேலை தேடப் போவதில்லை என்றும் சொல்கிறான்! அவ்வாறாயின் அவன் என்ன செய்ய உத்தேசித்திருக்கிறான்! அவனுடைய சிந்தனைப் போக்கு அதைப் பேச்சாக வெளியிடும் பாவனைகள் எல்லாமே ஏதோ ஒரு தினுசாக மாறிக் காணப்படுகின்றன. திடீர் திடீர் என்று உணர்ச்சி வயப்பட்டுக் குமுறுகிறான்: கோபாவேசம் அடைகிறான்: அவனது பேச்சில் அரசியல் வாடை அதிகமாக வீசுகிறது!..... வேலை கிடைக்காத துயரம், வேலைக்காகச் செய்யும் முயற்சிகளெல்லாம் தோல்வியுறுவதால் ஏற்படக்கூடிய மனச் சோர்வு, வீட்டின் வறுமை நிலையால் எழும் வெறுப்பு — இவையெல்லாம் சேர்ந்து ஒருவனின் குணப் போக்குகளையும் செயல்பாடுகளையும் மாற்றுவது சகஜம்தான். ஆனால் இவனுடைய போக்கு இதனினும் சற்று வேறாகக் காணப்படுகிறதே! இதன் மூல காரணம் என்னவாயிருக்கும்?'

நடந்து கொண்டிருந்த நரசுவின் அருகில் ஒரு டாக்ஸி வந்து நின்றது. அவன் திரும்பிப் பார்ப்பதற்குள் டாக்ஸியில் இருந்து ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து இறங்கிய விஜயரங்கன் அவனை அப்படியே கட்டி அணைத்துக் கொண்டான்.

''அடே நீயா?'' என்று திணறினான் நரசு.

அவனுடைய கையைப் பிடித்தவாறு முகத்தைச் சற்று நேரம் கூர்ந்து பார்த்த விஜயரங்கன், ''என்னப்பா இது! அஞ்சாறு நாட்களுக்குள்ளே ஆளே மாறி விட்டிருக்கிறே?'' என்று மெல்லிய குரலில் கேட்டுக் கொண்டே மோவாயைத் தூக்கினாற்போல் வைத்தபடி சிரித்தான்.

''சரிதான்! ரெண்டே வாரங்களுக்குள் ஒரு மாபெரும் காதல் ஓவியமே தீட்டி, 'பார்க்கிறவங்க பிர




**ரேஷன் பூதம்!**

பாட்னா நகரின் ஜனத்தொகை நாலு லட்சம். ஆனால் ரேஷன் கார்டுகள் எண்ணிக்கைப்படி பார்த்தால் 24 லட்சம்! அவ்வளவு போலிக் கார்டுகள் நடமாடுகின்றன. - ஹிந்துஸ்தான் டைம்ஸ்

- பாலி

---

மிக்கிற அளவுக்குப் பெரிய 'காதல் ஓவியராக' மாறுகிற மேதாவிகளெல்லாம் இருக்கும்போது சாமான்ய மனுஷனான நான் ஊரைவிட்டு வந்ததாலே கொஞ்சம் தோற்றத்தில் மாறிக் காணப்படறது ஒரு பெரிய அதிசயமா என்ன?'' என்றான் நரசு விஷமச் சிரிப்புடன்.

அவன் சொன்னதை உடனே புரிந்து கொள்ள முடியாமல் திருதிருவென்று விழித்த ரங்கன் ''என்ன ஓய்! திடீர்னு என்னென்னவோ பினாத்தறீர்?'' என்றவாறு அவனுடைய கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு டாக்ஸியை நோக்கி நடந்தான்.

'' எங்கே ரங்கா?''

''உனக்கு இப்போ ஒண்ணும் அவசர காரியம் இல்லையே?''

''இல்லை.''

''சரி வா! போவோம்.''

'' உன் ஹோட்டல் அறைக்குத்தானே?''

'' ஆமாம்.''

'' நீ இங்கே வந்திருக்கிற விஷயம் நேத்திக்குத்தான் எனக்குத் தெரிஞ்சுது. அதுவும் அசந்தர்ப்பமாய் ஒரு.....''

''கேள்விப்பட்டேன். நேற்று ராத்திரியே அந்தக் கடலூர்த் தியேட்டர் முதலாளியோட பெண் ஃபோனிலே சொன்னான். நீ தங்கியிருக்கிற வீட்டு விலாசம் தெரிஞ்சிருந்தால் முந்தா நாளே உன்னைப் பார்க்க வந்துவிட்டிருப்பேன்.''

''ஓ.... நீ வந்து மூணு நாளாகுதா? கடலூரிலிருந்து நேரே மெட்ராசுக்கு வந்துட்டயா?''

''இல்லே நரசு! மாயவரத்துக்குப் போய் அன்னிக்கே சென்னைக்குக் கிளம்பி வந்தேன். உன் அம்மாவையும் பார்த்தேன். உன்னுடைய சின்னாச்சி பாக்கியத்தம்மாளைப் பற்றி ஒரு முக்கியமான விஷயம் சொல்ல வேண்டியிருக்குது. சரி, புறப்படு.''

இருவரும் ஏறி அமர, டாக்ஸி கிளம்பிச் சென்றது. (தொடரும்)

# ஐ.ஏ.எஸ். அமையவில்லை; ஐ.வி.எஸ். ஆனார்!

## எங்கள் வீட்டுப் பிரசிடெண்ட்



பாரத நாட்டுப் பிரசிடெண்டுகளின் கையிலிருந்தே நேரடியாகப் பாராட்டுப் பத்திரங்களைப் பெறும் வாய்ப்பைப் பெற்றவர் எங்கள் வீட்டுப் பிரசிடெண்ட்! அவர் தான் என் கணவர், திரைப்பட இயக்குநர் திரு ஏ. சி. திரிலோகசந்தர்!

''என்னங்க பிரசிடெண்ட் சார்!'' என்றும் அவர் உதட்டைப் பிதுக்குவார். ''ஹூம்! நான் என்ன அமெரிக்கப் பிரசிடெண்ட் மாதிரியா பதவியைப் பயன்படுத்துகிறேன்? இந்த நாட்டுப் பிரசிடெண்ட் மாதிரிதானே இருக்கிறேன்! பிரதம மந்திரியாகிய நீ சொல்வதற்கெல்லாம் நான் தலை ஆட்டுகிறேனா இல்லையா?'' என்பார் வேடிக்கையாக!

அவர் வார்த்தைகளில் ஓரளவு உண்மையும் உண்டு. அவர் சதா ஏதாவது படித்துக் கொண்டிருப்பார். அல்லது தொழில் சம்பந்தமான நினைவில் மூழ்கியிருப்பார். ஆகவே அவருடைய தேவைகளை யெல்லாம் நான்தான் கவனித்தாக வேண்டும். அவருக்கு வேண்டிய துணிமணிகளை யெல்லாம் கூட நான் தான் பொறுக்கி வாங்கி வருவேன். போட்டதைச் சாப்பிட்டுவிட்டுப் போவார். 'இது வேண்டும், அது வேண்டும்' என்ற பிரச்னையே அவரிடம் கிடையாது. 'ஒரு வாய் ரசம் சாதம் போதும். அந்த ருசிக்கும் ரசனைக்கும்தான் நான் சிறு வயதிலே பழகியிருக்கிறேன்' என்று பெருமையுடன் சொல்லிக் கொள்வார்.

ஒரு மாவட்டக் கலெக்டராகவோ, ரெவின்யூ போர்டில் செக்ரட்டரியாகவோ அரசாங்கத்தில் பணியாற்ற வேண்டியவர். . எப்படியோ திசை மாறி மக்கள் ரசனைக்கு விருந்தளிக்கும் வகையில் திரைப் படங்களை உருவாக்கும் பணியில் ஈடுபட்டு விட்டார். இவர் பொருளாதாரப் பாடத்தில் எம். ஏ. பட்டம் பெற்றவுடன் ஐ. ஏ. எஸ். பரீட்சைக்கு உட்காரத் துடித்தாராம். ஆனால் அந்தப் பரீட்சைக்கு உட்கார அவசியமான குறைந்தபட்ச வயதை எட்ட இன்னும் ஒரு வருடம் காத்திருக்க வேண்டி யிருந்தது. அந்த ஒரு வருடத்தை வீணடிக்கவேண்டாமே என்று இவருடைய நண்பரின் தகப்பனார், தாம் ஈடுபட்டிருந்த இந்தச் சினிமாத் துறையில் இவரையும் பொழுது போக்காக உதவிகள் செய்துகொண்டிருக்க வாய்ப்பு அளித்தார். வருடம் ஓடி முடிந்தது. இவருக்கு ஏற்கனவே, எழுத்து, படிப்பு, கற்பனை இவைகளில் ஆர்வம் அதிகம். அந்த வகை ஆர்வங்கள் நன்கு மலர இந்தத் துறையே உசிதம் என்று கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டாராம். ஆகவே இவர் அப்புறம் ஐ.ஏ. எஸ். பரீட்சைக்கு உட்காரவே இல்லை. அதற்குப் பதிலாக இவர் உட்கார்ந்து எழுதாமலேயே பாஸ் செய்த பரீட்சை ஐ. வி. எஸ்! புரியவில்லையா? இந்தியன் சினிமா சர்வீஸ்!



எங்கள் திருமணம் கூட இந்த மாதிரி ஒருவித திசை திருப்பப்பட்ட விஷயம்தான். இவருக்கு எங்கெல்லாமோ பெண் பார்த்து, சேலத்தில் ஓர் இடத்தை இவர்கள் வீட்டில் தேர்ந்தெடுத்தார்களாம். நிச்சய தார்த்தம் செய்ய அவர்கள் வரும் நாள்கூடக் குறிப்பிட்டாகி விட்டது. ஆனால் அவர்கள் புறப்பட்டு வருவதில் ஏதோ தாமதம். அதற்குள் பக்கத்துத் தெருவில் இருந்த எனக்கும் இவருக்கும் பெரியவர்கள் பேசித் திருமணம் நிச்சயித்து விட்டார்கள்! பாவம், சேலத்துக் காரர்கள்!



இவரை இந்தத் துறையில் ஊக்குவித்ததில் பெரும் பொறுப்பு என் மாமியாரைத் தான் சேரும்! சாப்பிட்டுக் கொண்டே இவர் தம் மனத்தில் தோன்றும் கதை அமைப்பைத் தம் தாயாரிடம் சொல்வார். அவரும் ஆயிரம் குறுக்குக் கேள்விகள் போட்டும், யோசனைகள் சொல்லியும் இவருக்கு உதவுவார். என் மாமியார், எங்கள் பேட்டையில் உள்ள வாசகசாலை நவீனங்கள் அத்தனையும் அந்தக் காலத்தில் ஒன்று விடாமல் படித்தவர். ஆகவே,

அவர், கேள்விகளும், யோசனைகளும் விஷய ஞானத்துடன் இருக்கும். அவர் இவரைச் செல்லமாக எப்போதும் ''பாபு! பாபு!'' என்றுதான் கூப்பிடுவார். இவரும் ''பாபு'' என்ற தலைப்பில் திரைப் படம் தயாரித்தார்.

சமீபத்தில் இவர் மைசூர்ப் பகுதியில் உள்ள தலைக்காடு என்னும் ஊருக்குப் போய்த் திரும்பினார். அவர் வந்தவுடன் சொன்ன விஷயம்,

பிரசிடெண்ட்: **திரு ஏ. சி. திரிலோகச்சந்தர் எம்.ஏ.**

பேட்டியளித்தவர்: அவர் மனைவி **ஸ்ரீமதி பாரதி**

பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன் அவர் முதல் தடவையாகத் தலைக்காட்டுக்குப் போய், நினைவில் நிறுத்திக் கொண்ட அனுபவம்தான்.

தலைக்காடு சரியான காட்டுப் பிரதேசம். பாம்புகளுக்குப் பெயர் போன இடம். இவர் தங்கியிருந்த நாட்களில் முன் எச்சரிக்கையாகத் திறந்த வெளியில் கட்டில் போட்டு 'ஹோல்டால்' விரித்துத் தூங்கியிருக்கிறார். சில நாட்கள் அங்கே தங்கிவிட்டு வரும் வழியிலும் சில தினங்களைக் கழித்து ஊர் திரும்பியாயிற்று. அப்போதும் ஹோல்டாலிலிருந்து அழுக்குத் துணிகளை எடுத்துச் சலவைக்கு அனுப்ப இவருக்கு அவகாசமில்லை. இங்கு வந்தும் அந்தப் படுக்கையிலேயே படுத்திருக்கிறார். குழந்தைகளும் படுத்துப் புரண்டிருக்கின்றனர். ஒரு வாரம் கழித்து அந்த ஹோல்டாலிலிருந்து அழுக்குத் துணி மூட்டைகளை எடுத்து உதறியபோது ஒரு பாம்பு விடுதலை பெற்று வெளியே கிளம்பியது. ''நாம் தலைக்காடு பார்த்தால் தலைக் காட்டுப் பாம்பு பட்டிணம் பார்க்க வேண்டாமா?'' என்று சமத்காரமாகச் சொல்லி இவர் பதற்றத்தைச் சமாளித்தாலும் 'தம் மகன் தலைமாட்டிலேயே இத்தனை நாட்கள் இந்தப் பொல்லாத பாம்பு இருந்திருக்கிறதே' என்று இவர் தாயார் நடுங்கிப் போய் விட்டார்கள்! இந்தத் தடவை வந்த உடனேயே எல்லாவற்றையும் உதறிப் பார்த்து விட்டார்!

இவரை விலகி இருந்து பார்ப்பவர்கள், கொஞ்சம் முரட்டு சுபாவம் உள்ளவரோ என்றுதான் நினைப்பார்கள். தோற்றம் அப்படி! மிலிட்டரி போலீசுக்குத் தேர்வாகி வேண்டாம் என்று விட்டவர் தானே! ஆனால் நெருங்கிப் பழகுபவர்களுக்கு இவர் ஒரு குழந்தை சுபாவம் படைத்தவர் என்று தெரியும். கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்துவிடும் குணமுமில்லை! கலகலவென்று கர்ச்சனைச் சிரிப்பு சிரிக்கும் பழக்கமுமில்லை. எதையும் நிதானமாக ரசிக்கும் வழக்கம் உடையவர்!

பேட்டி:

**கோமதி சுவாமிநாதன்**

---

# விண்வெளி வெற்றி?



சூரிய மண்டலத்தில் பூமியைத் தவிர மற்ற கிரகங்களில் உயிரினங்கள் என்று ஏதாவது இருந்தாலும் கூட பாசி போன்ற அடிப்படைத் தாவர இனத்தைச் சேர்ந்தவையாகத்தான் இருக்கக்கூடுமென்பதும் மனிதர்கள், மிருகங்களைப் போன்ற வளர்ச்சியுற்ற ஜீவராசிகள் எதுவும் இல்லை என்பதும் உறுதியாகிவிட்டது. ஆனால் பிரபஞ்சத்தில் இந்தச் சூரிய மண்டலத்தைப் போன்று கோடானுகோடி சூரிய மண்டலங்கள் உள்ளன. ஒவ்வொரு நட்சத்திரமும் ஒரு சூரியனே. அவற்றைச் சுற்றி வரும் கிரகங்களும் ஏராளமாக உண்டு. அவ்வாறிருக்க, பூமியைத் தவிர பிரபஞ்சத்தில் நாகரிக வளர்ச்சியுற்ற ஜீவராசிகளையுடைய வேறு கிரகங்களே இல்லை என எப்படி முடிவு கட்டுவது?

கிறிஸ்து பிறப்பதற்கு நானூறு ஆண்டுகளுக்கு முன்னதாகவே மெட்ரோடோராஸ் என்ற பேரறிஞர், ''எல்லையற்ற விண்வெளியில் பூமியில் மட்டுமே மக்களினம் உண்டு என்று முடிவு கட்டுவது, வயல் முழுவதும் விதைத்த பின் ஒரே ஒரு நெல் மட்டும்தான் முளை விடும் என்று கருதுவதுபோல் அவ்வளவு அபத்தமானது'' என்று சொன்னார்.

இன்றைக்கும் விஞ்ஞானிகள் இவர் வாக்கை ஏற்கின்றனர். ஆயின் வேறு ஒரு சூரிய மண்டலத்தில் உள்ள நாகரிக வளர்ச்சியுற்ற சமுதாயத்துடன் தொடர்பு கொள்வதென்பது இன்றைய விஞ்ஞான சாதனைக்கு அப்பாற்பட்டது.

ஒரு விண்வெளி வீரன் ராக்கெட் வேகத்தில் அதாவது ஒரு விநாடிக்கு எட்டு கிலோமீட்டர் வேகத்தில் ஒரு விண்வெளிக் கப்பலில் பயணப்படுவானேயானாலும் நமக்கு மிக மிகச் சமீபத்தில் உள்ள ஒரு நட்சத்திரத்தை அடைய அவனுக்கு எண்பதாயிரம் ஆண்டுகள் ஆகும்! அதைவிடத் தொலைவில் உள்ள நட்சத்திரங்களைச் சென்றடைய அவனுக்கு லட்சக்கணக்கான, கோடிக்கணக்கான ஆண்டுகள் தேவைப்படும்!

ஆதாரம்: ஸ்பான்.

★ ★ ★

## உலக மகா அதிசயம்!



பம்பாய் நகரசபை தண்ணீர் வரியை உயர்த்தாத போது பால் விலை மட்டும் எப்படி உயர்ந்தது என்று ஓட்டல்காரர்கள் அதிசயித்தார்கள்.

டைம்ஸ் வீக்லி நிருபரின் கிண்டல்

தகவல்: 'பாலி'

# நவீன பாணியில் வாழ்ந்திடவே...

ஹிந்தாலியம் பாத்திரங்கள், சமைத்திடவும், படைத்திடவும்
ஹிந்தாலியம் பாத்திரங்களை உபயோகித்துப் பாருங்கள்... உங்கள் வாழ்க்கை
சுலபமாகவும், ஆனந்தமாகவும், பிரகாசமாகவும் இருப்பதைக் காண்பீர்கள்.
ஹிந்தாலியம் உபயோகிப்பதனால் உங்கள் குடும்பத்தினருடன் உல்லாசமாக
இருப்பதற்கு அதிக ஓய்வு நேரம் கிடைக்கும். ஹிந்தாலியம் உபயோகிப்பதனால்,
உங்களுக்குப் பணம் மிச்சமாகும், ஏனெனில் அது மலிவானது. ஹிந்தாலியம்,
சாப்பிடுவதை ஒரு இன்ப அனுபவமாக்குகிறது.
அவ்வளவு கவர்ச்சிமிக்கது.

## ஹிந்தாலியம்

**உபயோகியுங்கள்** — எண்ணற்ற பல பயன்களைத் தருகிறது.

**HINDALIUM®**
இவர்கள் தயாரிக்கும்
விசேஷ அலுமினியக்
கலப்புலோகத்தின்
ரெஜிஸ்டர்ட் டிரேட்
மார்க்.

**ஹிந்துஸ்தான் அலுமினியம்
கார்ப்பொரேஷன் லிட்,**
தபால் ஆபீஸ் ரேணுகூட்
ஜில்லா மிர்ஸாபூர் (உ.பி.)




ஹிந்தாலியம்
நிலையான விலையில்
விற்கப்படுகிறது.
அதிக விலை கொடுக்காதீர்கள். அங்கீகரிக்கப்
பட்ட வியாபாரிகளிடம்
உள்ள ஹிந்தாலியம்
பாத்திரத் தயாரிப்
பாளர்களின் விலைப்
பட்டியலுடன் ஒப்பிட்டுப்
பாருங்கள்.

வெள்ளியைப்
போல தோற
மளிக்கிறது.

Sobhagya HAC-603 Tam

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)